

WWW.AKARAM.EU

இலவச தமிழ் மாத இதழ்

AKARAM

# அகரம்

மே 2011

சுவடி: 01 திருவள்ளுவர் ஆண்டு 2042 கர வருடம் - சித்திரை

## இவ்வளவும் போதுமா இன்னும் கொஞ்சம் வேணுமா?

பான் கீமூனின் சிறுபிள்ளைத்தனமான பேச்சு





முத்துக்குமார் வழியில் கிருஷ்ணமூர்த்தி



## மகாவம்சத்தில் மகிந்தர்!

FREE Magazine

# உலக மகா பயங்கரவாதி (?) ஒசாமா பின் லேடன் ஒழிந்தான்!

FREE CIRCULATION:
Germany, Switzerland, France, England, Denmark, Norway, Holland, Sweden

tMedia Network

நிறுவனத்தின்



# அகரம்




அனைத்துத் தொடர்புக்கும்:

editor@akaram.eu

www.akaram.eu

தொ.பே.: 00 49 23 81 98 77 897




அகரம் வாசகர்களுக்கு வணக்கம்!

நாம் வாழும் இந்த விஞ்ஞான உலகில் பல்வேறுப்பட்ட தகவல்களைத் தெரிந்து கொள்ள பலதரப்பட்ட ஊடகங்கள் காணப்படுகின்றன. இருப்பினும் சில செய்திகளை பக்கசார்பாக, அல்லது புகழுக்காக திரிபுபடுத்தி, உண்மைத் தன்மை இல்லாது கூறப்படுகின்றன. இயந்திரமாக சுழலும் உலகில் என்ன நடைபெறுகிறது, எது உண்மை என சமூகம் சில வேளைகளில் திண்டாடுகிறது. இதனை அடிப்படையாக கொண்டு நாம் ஒரு புதிய பாதையை தெரிவு செய்துள்ளோம். அந்தப் பாதையில் ஓர் பயணம் தான் இவ் இதழ்.

எமது சமுதாயத்திற்கும் உலகத் தமிழ் மக்கள் அனைவருக்கும் உண்மை தகவலை எமது ”அகரம்” ஆசிரியர்களால் நேரடியாகத் திரட்டப்பட்டே பிரசுரிக்கப்படும். வேறு ஊடகங்களிலோ அல்லது இணையதளங்களிலோ வெளிவராத தகவல்களை கொண்டு சேர்க்க வேண்டும். அதன் மூலம் எமது சமுதாயத்தினருக்கு இவ்வுலகம் சார்ந்த விழிப்புணர்வை ஏற்படுத்த வேண்டும் என்பதே இப் பயணத்தின் முக்கிய குறிக்கோளாகும். இவ் இதழின் பயணத்தில் உலகின் பல பாகங்களிலுமுள்ள புதிய சிந்தனையாளர்களும், எழுத்தாளர்களும் எம்மோடு பயணிக்கிறார்கள். இந்தப் பாதையில் பயணிக்கின்ற நாம் பக்கசார்பற்று, புகழுக்கு அடிமையாகாது, எவ்வித பிரதிபலனும் எதிபார்க்காது நேர் வழியில் செல்ல ஆசைப்படுகின்றோம். எமக்கு வழிகாட்ட உங்கள் அனைவரினதும் ஆசிகளையும் பேராதரவையும் எதிர்ப்பார்கின்றோம்.

உலகின் அனைத்து விதமான தகவல்களையும் உண்மைத் தன்மை குறையாது அறிய வேண்டுமாயின் நீங்களும் பயணியுங்கள்.

நன்றி!
அகரம் நிர்வாகம்.



# வை. கோவின் அரசியலுக்கு ஆப்பு வைத்தது சிங்களமா?

த. எதிர்மானசிங்கம்

ஈழத் தமிழர் வரலாற்றை மண்ணோடு பெயர்த்து விடுவதில் சிங்கள இனம் மிகத் தீவிரமாக இருக்கிறது. 1890ம் ஆண்டு காலப்பகுதியில் ஆரிய பௌத்த சிங்கள தேசியவாதத்தை தோற்றுவித்து சிங்கள மக்கள் மத்தியில் இன வெறியை ஆழ வேரூன்ற வைத்தவர். சகல சிங்கள மக்களின் மனங்களில் ஆதர்ஷ தலைவ-னாக இன்றும் வாழ்ந்து வரும் அநாகாரிக தர்மபாலா எனப் பௌத்த பெயர் ஏற்றுக் கொண்ட டேவிட் ஹேவவிதாரணா ஆவர். இவர் இன்றும் இலங்கையின் மிகப் பிர-பல மரத் தளபாட நிறுவனமாக விளங்கும் டொன் கரோலிஸ் குடும்பத்தில் பிறந்தவர்.

புரட்டஸ்தாந்து மதத்தில் பிறந்து தென்னிந்தியாவில் புத்த மத ஆய்வில் ஈடுபட்டு அநாகாரிக தர்மபால எனப் பெயர்மாற்றம் செய்து சிங்கள பேரினவாதத்தின் தந்தை இவரே எனக் கூறும் அளவுக்கு வாழ்ந்து காட்டியவர். பல பத்திரிகைகளை சிங்களத்தில் தாமே நடத்தியும் எம்.டி.குணசேனா போன்ற பிற பத்திரிகை நடத்தியவர்களின் ஆதரவுடனும் ஆரிய சிங்கள பௌத்த பேரினவாத நச்சு மரத்தை இனவெறி நீரூற்றி வளர்த்து 1915ல் இலங்கையில் இந்திய மற்றும் இஸ்லா மிய மக்களுக்கு எதிரான முதல் இன வெ-றித் தாக்குதலை நடத்திய சூத்திரதாரியும் இவரே.

இலங்கையின் அன்றிருந்த 9 மகாணங்களில் வடக்கு கிழக்குத் தவிர்ந்த 7 மாகாணங்களிலும் சிங்களக் கொலைவெறி தாண்டவமாடியது. 350 முஸ்லீம் கடைகள் எரிக்கப்பட்டன. 4075 முஸ்லீம் கடைகள் கொள்ளை அடிக்கப்பட்டு 103 பள்ளி வாசல்கள் அழிக்கப்பட்டு 25 முஸ்லீம்களின் உயிர்கள் பறிக்கப்பட்டன. அன்றைய மதிப்பில் அழிக்கப்படட சொத்துக்களின் மதிப்பு 70 இலட்சம் ரூபாய்கள். இலங்கையை ஆண்ட பிரித்தானிய அரசு டி.எஸ். உட்பட சிங்களத் தலைவர்கள் பலரையும் பயங்கர வாதத்ததைத் தூண்டிய குற்றத்துக்காகச் சிறையில் தள்ளியது.

டி.எஸ் முதல் இன்று மகிந்த வரை இந்த ஆரிய பௌத்த சிங்கள வெறியால் ஊட்டி வளர்க்கப்பட்டவர்கள்தான். இடதுசாரி தலைவர்களான கொல்வின் ஆர்.டீ.சில்வர,

பீட்டர் கெனமன், என்.எம்.பெரரோ என்போரும் இந்த வெறிக்குள் சிக்கித் தமது இடது சாரி அரசியலை குழி தோண்டிப் புதைக்க வேண்டியதாயிற்று. இந்தப் பழைய கதை எல்லாம் எதற்கு? என வாசகர் கோவிப்பது தெரிகிறது. தமிழ் மக்களும் இஸ்லாமிய மக்களும் தமது பழைய வரலாற்றுப் பெருமைகளையும் தவறுகளையும் மறந்து விட்டகாரணத்தால் இன்று இவ்விரு மக்கள் இனமும் மிகப் பெரும் இழி நிலைக்கு உள்ளாகி உள்ளது.

ஆனால் சிங்கள இனவெறி 100 வருடங்களைக் கண்டு உலக அளவில் தெரிய வந்த பின்னரும் தமிழரும் சிங்களவரும் சேர்ந்து வாழ முடியும் என வரட்டு வேதாந்த அரசியல் நடத்தும் தமிழ் இஸ்லாமிய அரசியலவாதிகளை என்ன சொல்லிப் பாராட்டுவது? சிங்களத் தலைவர்களின் வாசலில் பிச்சை ஏந்துவது போல் உரிமை கேட்பதாக பாசாங்கு காட்டித் தமக்கு மட்டும் தனிப்பட்டசலுகைகளைப் பெறும் அரசியலை நடத்தி வருகிறார்கள். ஆனால் இவ்விரு சமூகத்தைச் சேர்ந்த பொது மக்களோ தேடுவாரற்ற ஏதிலிகளாய் சிங்களத்தின் ஏவல் அடிமைகளாய் காலம்-கழிக்கின்றனர்.

நூற்றாண்டுகள் ஆன பின்னரும் சிங்களத்தின் ஆரிய பௌத்த சிங்களக் கனவு நின்று விடவில்லை. துட்டகைமுனு கனவு கண்ட இலங்கைத் தீவில் எந்த ஒரு தமிழனும் இருக்கக் கூடாது. இந்த நினைப்பு ஒக்ஸ்பேட்டில் பட்டம் பெற்ற பண்டா, மகிந்தா ஆனாலும் சோபேணில் பட்டம் பெற்ற சந்திரிகா ஆனாலும் நீங்காத கனவாக உள்ளது. இதிலிருந்து யாரும் தப்ப முடியாது தப்பியதும் கிடையாது.

எனவே மகிந்த சகோதரர்களும் சிங்கள மக்களும் தமிழ் முஸ்லீம் மக்களுக்கு இலங்கையில் சமாதி கட்டவே உறுதியாக உள்ளனர். சிங்களத்தைப் பொறுத்த வரை இலங்கையில் பறங்கியர் என்ற இனம் வரலாற்றில் இருந்து நீக்கப் பட்டுவிட்டது. இஸ்லாமிய சமூகம் சிங்களத்தின் கைப் பாவையாகிவிட்டது. எஞ்சி உள்ள தமிழி-னம் மட்டும் தமிழகத்தின் பலத்தால் அடங்க மறுக்கிறது.



**அதன் இன்னொரு விழுதாக புலம் பெயர் தமிழ் மக்கள் விளங்குகின்றனர். எனவே ஈழத் தமிழினத்தின் வரலாற்றை அது ஒரு இறையாண்மை அற்ற சுய நிர்ணய உரிமை அற்ற நிலையான வாழ்விட-மற்ற இனமாக்க வேண்டிய அவசியமும் அவசரமும் சிங்களத்துக்கு இருக்கிறது. இதை நன்கு உணர்ந்து கொண்ட சிங்களம் தனது அடுத்த கட்ட நிகழ்வுக்குத் தன்னை நகர்த்திக் கொள்கிறது.**

அதன் இரு முனைத் தாக்குதல் வடிவமாக புலம் பெயர் தமிழர் மத்தியில் சீர்குலைவை ஏற்படுத்தி தனித் தமிழீழம் நோக்கிய செயற் திட்டங்களை சிதறடிப்பது ஒன்று. அதில் உருண்ட முதல் தலை கே.பீ. எனப்படும் குமரன் பத்மநாதனது. அடுத்த இலக்கு நிச்சயமாக நாடு கடந்த தமிழீழ அரசும் அதனை முன்னெடுக்கும் விசுவநாதன் உருத்திர குமாரன் என்பதை மிக எளி-தாக எவரும் புரிந்து கொள்ள முடியும். ஆனால் தமிழர் யாரும் அவ்வாறு பார்க்கத் தவறுவது தமிழினத்தைப் பொறுத்த வரை தற்கொலைக்கு ஒப்பாகும்.

**இருப்பினும் சிங்களம் சர்வதேச அரங்கில் புலம் பெயர் தமிழரின் சவாலை சுலபமாக எதிர்கொள்ள முடியும் என்ற தைரியத்தை சீன ரஷிய நாடுகளின் ஆதரவும் இந்தியாவின் பின்புலமும் கொடுத்து வருகிறது. நாடு கடந்த தமிழீழ அரசு தமிழ் நாட்டில் கால்பதித்து ஈழத் தமிழரின் அரசியல் அபிலாசைகளுக்கு அடித்தளம் இட முனைந்து வருகிறது.**

இங்கேதான் தமிழ்நாடும் அதன் அரசியலும் சிங்களத்துக்கு தனித்துவமான முக்கியம் பெறுகிறது. இந்திய மத்திய அரசின் உதவியைத் தக்க வைக்க காங்கிரஸ் கட்சியை விடவும் நல்ல நம்பிக்கையான கையாள் சிங்களத்திற்குக் கிடைக்க முடியாது. மேலும் ஈழப் போரில் ஆரத் தழுவி அந்தப் பாவத்திலும் பங்காளி ஆகிவிட்ட காங்கிரஸ் கட்சி ஆட்சியில் உள்ளவரை இந்தியாவின் கண்ணுக்குள் விரலை விட்டு ஆட்டியபடியே நினைத்ததை சிங்களம் சாதிக்க முடியும்.

**எனவே மத்தியில் காங்கிரஸ் ஆட்சியைப் பிடிக்க தமிழ் நாட்டில் அதன் கூட்டணி வெற்றி பெறவேண்டும். காங்கிரஸ் எந்த அளவுக்கு சிங்களத்துக்கு தேவையோ அந்த அளவுக்கு கலைஞரின் தி.மு.க. சிங்களத்தின் நம்பிக்கைக்கும் தேவைக்கும் உரிய ஒன்றாக மாறி விட்டது.**

ஊழல், குடும்ப ஆட்சி, அதிகாரத் துஷ்ப்பிரயோகம், சொத்துக் குவிப்பு, சினிமாத் தொழில் துறையில் ஏக போக ஆதிக்கம் என எல்லா வகை எதிர்ப்பாலும் ஆட்சியை இழக்கும் ஆபத்து காங்கிரஸ் தி.மு.க. கட்சிகளை மிரட்டி வருகிறது. இந்த நிலையில் விஜயகாந்தோடு கூட்டணி வைக்கவும், தனது தேர்தல் வெற்றியைச் சுலபமாக்கவும் தி.மு.க வெளிப்படையாக ஆர்வம் காட்டாமலே அதற்கான இரகசிய முன்னெடுப்புகளைத் திரை மறைவில் இடம் மேற்கொண்டது.



பிரபல பத்திரிகையாளர் சிரிப்பு நடிகர் சோ அ.தி.மு.க விஜகாந் கூட்டணியை வெற்றிக் கூட்டணியாக அமையும் எனப் பேசி அதற்கான அடிக் தளத்தை நாட்டவும் செய்தார். பிராமண வகுப்பைச் சேர்ந்த அவரும் ஜெயலலிதாவும் ஒருமித்த அரசியல் சிந்தனையும் நெருக்கமான தொடர்புகளும் கொண்டுள்ளவர்கள். அ.தி.மு.க வெற்றி பெற வேண்டும் என்பதற்காகவே அ.தி.மு.க., விஜயகாந் கூட்டணி உருவாக வேண்டும் என்பதில் உறுதியாக நின்றவர்.

விஜயகாந் தி.மு.க கூட்டணி இல்லாமல் போனாலும், அ.தி.மு.க. விஜயகாந் கூட்டணி வரக் கூடாது என்பதில் தி.மு.க.வும், அதன் அதிகாரத்தில் இயங்கும் தமிழக உளவுத் துறையும் அரும்பாடு பட்டன. வை.கோ. விஜயகாந் அ.தி.மு.க. ஒரு பெரும் வெற்றிக் கூட்டணியாகி தி.மு.க. காங்கிரஸ் ஆட்சிக்கு முடிவு கட்டிவிடும் என்பது அனைத்து தரப்பினரதும் முடிந்த முடிவு.

**இந்நிலையில் விஜயகாந் அ.தி.மு.க. கூட்டணியை தடுக்க முடியவில்லை என்றாலும் குறைந்த பட்சம் அதன் வெற்றி வாய்ப்புக்கு வேட்டு வைத்தால் என்ன என்ற முடிவுதான் வை.கோவுக்கு அடிக்கப்பட்ட ஆப்பு.**

வை.கோ. பலமுனைத் தாக்குதலுக்கு இலக்கான நிலையில் இருந்தார். அ.தி.மு.க.வில் அவரது செல்வாக்கும் பேச்சும் செயலும் அவரை ஜெயலலிதாவுக்கு அடுத்த நிலைக்கு எடுத்துச் செல்லக்கூடிய அளவுக்கு வளர்ந்திருந்தது. வை.கோ. தி.மு.க.வில் இருந்து வெளியேற எப்படி ஸ்டாலின் கலைஞரின் இடத்தில் ஏற்றப்பட வேண்டிய தேவை இருந்ததோ அதே நிலை அவருக்கு இப்போதும் ஏற்பட்டது.

ஜெயலலிதாவின் ஒட்டுண்ணி போலுள்ளவரும் அதே வேளை தனிபட்ட அதீத செல்வாக்குடன் விளங்குபவரான சசிகலாவின் அடுத்த
அரசியல் கனவுக்கு வை.கோ. ஒரு சவாலாக தெரிந்ததில் புதுமை கிடையாது. எனவே திடீரென வேட்பாளர் பட்டியலை வெளியிட்டு கூட்டணிக் கூட்டைக் குலைத்ததே அவரது சதி என்கிறது ஒரு தரப்பு. இது சரியாகவே படுகிறது.

சசிகலா போட்டது சாதாரண வேட்டு என்றால் அடுத்து விழுந்த வேட்டு அதிர் வேட்டு எனலாம். வெடிக்கச் செய்தவர் பிரபல தொழில் அதிபரும் ஜெயலலிதாவின் நண்பரும் என நன்கு அறியப்பட்ட விஜய மல்லையா ஆவர்.

இவர் உலக அளவில் முதலீடு செய்யும் வளமும் வசதியும் உள்ளவர். சர்வதேச அளவில் கார் ஓட்டப் பந்தயத்தில் வேகக் காரோட்டிளைத் இன்று தேடிவருகிறார் என்றால் அவரது தொழில் முறை வேகம், விவேகம் என்ன என்பதை அறியலாம்.

**தூத்துக் குடியில் உள்ள மல்லையாவின் தூத்துக்குடி ஸ்டெர்லைட் என்ற துத்தநாத உருக்காலையால் அங்குள்ள மக்களுக்கும் சுற்றுச் சூழலுக்கும் கேடு விளைவிக்கிறது என வழக்குத் தாக்கல் செய்து அதனை மூட வைத்துவிட்டார் வை.கோ. மல்லையா புது டில்லியில் மேன் முறையீடு செய்தும் அங்கும் வை.கோ வழக்கை வாதாடி வருகிறார். இது வை.கோ. மீது ஜெயலலிதா எச்சரிக்கையோடு நடக்க வேண்டிய நிலையை உருவாக்கிவிட்டது.**

கதை இத்தோடு நிற்கவில்லை. மாறாக மல்லையா மகாத்மியம் மகிந்தர் வரை நீண்டு கிடக்கிறது. வை.கோ. எதிர்ப்பு மகிந்தர் வரை பரவி இருப்பதுதான் கதையின் உச்சக்கட்டம். கொழும்பில் மல்லையாவின் வர்த்தகம் காலூன்ற மகிந்தரிடம் மல்லையா சென்றபோது அவரிடம் ஜெயலலிதாவிடம் சொல்லி வை.கோவை ஓரங்கட்ட முடியாதா என மகிந்தர் வேண்டுதல் விடுத்தாராம்.

மேலும் சிங்களப் பெண்ணைத் தாயாகக் கொண்டுள்ள தமிழக முன்னணி
சினிமா நடிகையின் தாயாருக்கும் மகிந்தர் இதே கோரிக்கையை வைத்துள்ளாராம். கோரிக்கை வெறும் சொற்களல்ல கோடிகளைக் கொட்டி உள்ளது என்பது போல் வை.கோ கூறினார்.

அந்த விபரங்களை வை.கோ பகிரங்கமாக வெளியிட வேண்டும் என தொல். திருமாவளவன் சவால் விடுத்துள்ளார். பணம் மகிந்தர் கொடுத்தார் என்றாலும் ஆச்சரியப்பட தேவை இல்லை. முன்னர் அரச அதிபர் தேர்தலில் தமிழ் மக்களைப் பகிஷ்கரிக்கச் செய்து தாம் வெற்றி பெற மகிந்தர் புலிகள் அமைப்புக்கு பணம் கொடுத்தார் என்றால் இதற்கும் ஏன் தயங்குவார்?

**இவை வெறும் தகவலுக்காக இங்கு தரப்படவில்லை. தமிழர் எதிர் நோக்கும் அரசியல் சதுரங்கத்தில் ஈழத் தமிழர் மட்டும் அல்ல இந்தியத் தமிழர் கதையும் சிங்களத்தின் கைகளில் தங்கி உள்ளது எனக் காட்டவே தி.மு.கவோ அ.தி.மு.கவோ இரண்டுமே சிங்களத்தின் பிடிக்குள் சிக்கிக்கிடக்கின்றன.**

தமிழரை இலங்கை இந்திய அரசியல்வாதிகளால் காப்பாற்ற முடியாத நிலை தோன்றுகிறது. புலத்தில் உள்ள தமிழரோ ஒற்றுமை இல்லாது பலமும் வளமும் சிதறிய நிலையில் உள்ளனர். நாடு கடந்த தமிழீழ அரசு எப்படி எவ்வளவு காலம் உயிர் வாழும் என்ற பயம் எழுவது தவிர்க்க முடியாது உள்ளது. தமிழினம் சிந்திக்குமா?

# வானியல் 50 000 000 000 ?

என்ன இது சும்மா 50 ட்றில்லியன் என்று போடாமல் இலக்கம் போட்டுப் பயமுறுத்தலாமா என்னும் உங்கள் கேள்வி நியாயமானதுதான். ஆனால் உண்மைக் கணக்கு சரியா தெரியாதே!

நாம் வாழும் பூமி அடங்கிய சூரியக் குடும்பம் விண்வெளியில் பால் வழி அதாவது ஆங்கிலத்தில் மில்கி வே எங்கேஎன்றனர். இது ஒரு நட்சத்திரத் தொகுதி. அதாவது நமது 27 நட்சத்திரக் கூட்டங்களில் அடங்கியது. இரவு நேரத்தில் வானம் துல்லியமாக இருக்கும் பொழுது மேலே பார்த்தால் ஒரு நீண்ட வெள்ளை ஒளிப் படலம் இருப்பதை வெறும் கவிகளால் பார்க்க முடியும்.

இதுதான் பால் வழி. விண்வெளி ஆய்வுத் தொலை நோக்கியான கெப்லர் மூலம் வானியலாளர்கள் கணக்கிட்ட அண்ணளவான நட்சத்திரங்கள் இவை. நமது கண்களை மின்னிக் கவரும் நட்சத்திரம் ஒவ்வொன்றும் எமது சூரியன் போன்ற சூரியனாகும். இவற்றுக்கும் இங்குள்ள கிரகங்கள் போன்று கிரகங்கள் உண்டு கணக்கு எவருக்கும் தெரியாது. இந்த 50 ட்றில்லியன் சூரிய மடெலங்களில் குறைந்தது ஒவ்வொரு 200 சூரியனில் ஒன்று என்ற கணக்கில் உயிர்கள் வாழும் சூழலைக் கொண்ட கிரகம் இருக்கும் என விஞ்ஞானிகள் கூறுகின்றனர்.

# கடவுளைக் காட்டுங்கள்!



வண்ணை தெய்வம்

சுமார் முப்பது வருடங்களுக்கு முன்னர் இரண்டு மேதைகளுக்கு நடுவே நடந்த ஒரு மாபெரும் சர்ச்சை! அது கடவுள் இருக்கின்றாரா? இல்லையா? என்பதுதான். சச்சையில் ஈடுபட்டவர்களில் ஒருவர் பகுத்தறிவுச் சிந்தனையாளர் அமரர் டாக்டர் ஏப்ரகாம் கோவூர். அடுத்தவர் அமரர் திருமுருக கிருபானந்த வாரியார் அவர்கள்.



"கடவுள் இல்லை! கடவுளை எனக்குக் காட்டினால் ஒரு இலட்சம் ரூபா அன்பழிப்பாக தருவேன் என அறிவித்தாள் டாக்டர் கோவூர் அவர்கள். இதற்கு பதில் அளித்த வாரியார் அவர்கள் "காற்று இருக்கின்றது ஆனால் அதைக் கண்களுக்கு காட்டமுடியாது. அதே போலத்தான் கடவுள் இருக்கின்றார் அவரையும் கண்களுக்கு காட்ட முடியாது" என்றார். வாரியாரின் இந்த வாதத்திற்கு கோவூர் அவர்கள் "காற்றை கண்களுக்கு காட்ட முடியாவிட்டாலும், காற்று இருக்கின்றது என்பதை என்னால் நிரூபிக்க முடியும். கடவுள் இருக்கின்றார் என்பதை தங்களால் நிரூபிக்க முடியுமா?" என மறு கேள்வி கேட்டார். இப்படியாக கடவுள் இருக்கின்றாரா? இல்லையா? என்ற இந்த வாதம் தீர்ப்பு வழங்கப்படாத பட்டிமன்ற விவாதம்போல இன்றுவரை தொடர்ந்து கொண்டுதான் இருக்கின்றன. நாத்திகவாதிகளும், ஆத்திகவாதிகளும் தங்கள் தங்களுக்கு சாதகமான பதில்களை சொல்லி திருப் திப்பட்டுக்கொள்கின்றார்கள். இதோ இரு தரப்பினரும் திருப்திப்பட்டுக்கொள்ளக்கூடிய ஒரு குட்டிக்கதை.

ஒரு ஊரில் இயற்கையின் அனர்த்தத்தால் பெரு வெள்ளம் ஏற்பட்டது. இரு வயதானவர்கள் வெள்ளத்தில் இருந்து தங்களை பாதுகாத்துக்கொள்ள வீட்டுக் குடிசை ஒன்றின்மேல் ஏறி அமர்ந்து கொண்டு "கடவுளே எங்களைக் காப்பாற்றுங்கள், எங்களைக் காப்பாற்றுங்கள்" என பிரார்த்தித்துக் கொண்டிருந்தார்கள். அப்பொழுது அந்தப் பக்கமாக கட்டுமரங்களில் வந்தவர்கள் "எங்கள் கட்டுமரங்களில் வந்து ஏறிக்கொள்ளுங்கள் தப்பிவிடலாம்" என்று அழைக்க அதற்கு அந்த இருவரும் எங்களைக் கடவுள் காப்பாற்றுவார் நீங்கள் போங்கள் எனக்கூறி அனுப்பிவிட்டார்களாம்!

நேரம் செல்லச் செல்ல வெள்ளத்தின் உயரம் அதிகரித்துக் கொண்டே இருந்தது. அப்பொழுது அந்தப் பக்கமாக படகில் வந்தவர்கள் "வந்து படகில் ஏறிக்கொள்ளுங்கள்" என்று கேட்க அப்போதும் அந்த இருவரும் "எங்களைக் கடவுள் காப்பாற்றுவார்" எனக்கூறி மறுத்துவிட்டார்களாம்.

வெள்ளம் கூரை முகட்டளவிற்கு வந்தபோது அந்தப்பக்கமாக கெலிக்காப்டரில் வந்தவர்கள் நடக்கப்போகும் விபரீதத்தை விளக்கி எச்சரித்து அழைத்தபோது ஒருவர் மட்டும் அவர்களுடன் செல்ல அடுத்தவர் "என்னை கடவுள் காப்பாற்றுவார் எனக்கூறி கூரையிலேயே இருந்து வெள்ளத்தில் அடிபட்டு இறந்து போனாராம்.

கெலிக்கப்டரில் காப்பாற்றப்பட்டவரைப் பார்த்து காப்பாற்றியவர்கள் "என்ன உங்கள் நண்பர் பயித்தியாரத்தனமாக இல்லாத ஒரு கடவுளை நம்பி தன் உயிரையே விட்டுவிட்டாரே" என பரிகசிக்க அதற்கு அவர் சொன்னாராம் "இல்லைங்க அவரைக் காப்பாற்ற கடவுள் மூன்று சந்தர்ப்பங்களை வழங்கினார் ஆனால் அவர்தான் அதைப் பயன்படுத்திக் கொள்ளவில்லை" என்று தன்னைக் காப்பாற்றியதும் நீங்கள் இல்லை கடவுள்தான் என விளக்கம் கொடுத்தாராம்.

## இப்பொழுது நீங்களே சொல்லுங்கள் கடவுள் இருக்கின்றாரா? இல்லையா?

# முத்துக்குமார் வழியில் கிருஷ்ணமூர்த்தி...



அண்ணாகண்ணன்

ஈழத் தமிழர்களுக்காகத் தமிழகத்தைச் சேர்ந்த முத்துக்குமார் என்ற இளைஞர், தீக்குளித்து மாண்டார். அவர் எழுதி வைத்துச் சென்ற கடிதம், உலகெங்கும் உள்ள தமிழர்களிடம் பெரும் உத்வேகத்தை ஏற்படுத்தியது. அதே வழியைப் பின்பற்றி, கிருஷ்ணமூர்த்தி என்ற இளைஞரும் கடிதம் எழுதி வைத்துவிட்டு, தீக்குளித்து மாண்டுள்ளார்.



நெல்லை மாவட்டம் சங்கரன் கோயில் அருகே உள்ளது சீகம்பட்டி கிராமம். இங்குள்ள ராமசுப்பு என்பவரின் மகன் கிருஷ்ணமூர்த்தி (25). பொறியியலில் இளங்கலைப் பட்டம் (பி.இ.) பெற்ற இவர், இராஜஸ்தானில் பொறியியலாளராகப் பணியாற்றி வந்தார். ஈழ விவகாரம் குறித்து, நண்பர்களிடம் பேசிவந்துள்ளார். இலங்கையில் நடந்த தமிழர் படுகொலைகள் குறித்த ஐ.நா. அறிக்கை வெளியானதும் தீவிரமாகப் பேசியுள்ளார். விடுமுறைக்காகச் சொந்த ஊருக்கு வந்தவர், 2011 ஏப்ரல் 18 அன்று, இந்தத் துயர முடிவை எடுத்துள்ளார். ஏற்கனவே வாங்கி வைத்திருந்த 3 லிட்டர் பெட்ரோலை, ஒவ்வொரு லிட்டராகத் தன் மீது ஊற்றி கொளுத்திக்கொண்டு, ‘ராஜபக்சேவைத் தூக்கில் போடுங்கள்’ என்று கதறியபடி மயங்கி விழுந்து மாண்டார்.

கிருஷ்ணமூர்த்தி தன் கைப்பட எழுதிய கடிதம்:

அன்று ராவணன் செய்த கொடுமையான செயல்களை இன்று சிங்களவர்கள் செய்து விட்டார்கள். அவர்களுக்கும் இப்படி ஒரு நிலை ஏற்பட்டால் என்ன ஆகும் என்று நினைத்துப் பார்த்திருக்க வேண்டும். இலங்கையில் சிங்களவர்களின் இனவெறித் தாக்குதலால் பாதிக்கப்பட்ட தமிழர்களுக்கு அதற்குரிய பலனைப் பெற்றுத் தர வேண்டும். இலங்கைத் தமிழர்கள் அனைவரையும் ஒன்றிணைத்து அவர்களுக்குத் தனி நாடு என்ற சிறப்பைப் பெற்றுத் தர வேண்டும்.

அதுவரை தமிழகத்தில் ஆட்சி பொறுப்பேற்கக் கூடாது. அப்படி பொறுப்பேற்றால், தயவு செய்து விஷ்ணுவின் பிறப்பு என்று சொல்லிக்கொள்ளும் கோயில்கள் அனைத்தையும் மூடிவிடுங்கள். இந்திய ஆட்சியாளர்கள்தான் இன்றைய சூர்ப்பனகை.

இலங்கைத் தமிழர்களுக்காக போராடிய போராட்டத்தில் முத்துக்குமாரே சிறந்தவர். இலங்கைத் தமிழர்களுக்காகப் போராட மீண்டும் என் ஆஞ்சநேயரை அழைக்கிறேன்.

அப்பா, அம்மா, சீனி, தினகரன் என்னை மன்னித்து விடுங்கள். எனக்கு பிறவியில் கொடுக்கப்பட்ட தொழில் இதுதான். இதை நான் செய்யாவிட்டாலும், மிகப் பெரிய குற்றவாளி நான்தான்.



இவ்வாறு கிருஷ்ணமூர்த்தி தனது கடிதத்தில் எழுதியுள்ளார்.

தகவல் அறிந்த மதிமுக பொதுச்செயலாளர் வைகோ, உடனே சீகம்பட்டி கிராமத்துக்கு வந்து அஞ்சலி செலுத்தியுள்ளார்.

கிருஷ்ணமூர்த்தியின் இந்த முடிவு, மிகவும் துரதிருஷ்டவசமானது. தற்கொலை செய்துகொள்வதால், எந்தப் பயனும் விளையப் போவதில்லை என்பதை அவர் உணரத் தவறிவிட்டார். இவ்வளவு துயரங்களையும் தாங்கிக்கொண்டு, ஈழத் தமிழர்களே நம்பிக்கையுடன் நிற்கும்போது, முத்துக்குமார், கிருஷ்ணமூர்த்தி ஆகியோர் அவசரப்பட்டது, மிகவும் தவறு. இத்தகைய தவறுகள், இனி ஒருபோதும் நிகழக் கூடாது. உணர்ச்சிவசப்படுவதைக் காட்டிலும் ஆழமாகச் சிந்திப்பதும் செயல்படுவதும் முக்கியம். உயிரோடு இருந்து சாதிக்க வேண்டியவை நிறைய உள்ளன என்பதை உணர்வாளர்கள் முதலில் உணர வேண்டும்.

கோபால் அன்ட் கோ

இலங்கையில் இடம்பெற்ற போர்க் குற்றங்கள் தொடர்பாக ஐ.நா. செயலாளர் நாயகம் தனக்கு ஆலோசனை வழங்குவதற்காக நியமித்த நிபுணர்கள் குழு வெளியிட்டிருக்கும் அறிக்கையையிட்டு இந்தியா காட்டும் மௌனம் தொடருமா? அல்லது இது தொடர்பில் இந்தியா தனது நிலைப்பாட்டை வெளிப்படுத்துமா? என்பது இராஜதந்திர வட்டாரங்களில் இன்று எழுப்பப்படும் பிரதான கேள்வியாகும். இவ்விடயத்தில் இந்தியா எடுக்கக்கூடிய எந்தவொரு நிலைப்பாடும் தற்போதைய இராஜதந்திரக் காய்நகர்த்தல்களில் முக்கிய திருப்பத்தை ஏற்படுத்துவதாக அமையக்கூடும் என்பதால்தான் இந்தியாவின் நிலைப்பாடு தொடர்பில் இராஜதந்திர சமூகத்தினர் அதிகளவுக்கு கவனத்தைக் குவித்திருக்கின்றார்கள்.

விடுதலைப் புலிகளுக்கும் இலங்கை அரச படைகளுக்கும் இடையிலான இறுதிக்கட்டப் போரின்போது இடம்பெற்றிருக்கக்கூடிய போர்க் குற்றங்கள் தொடர்பாக ஐ.நா நிபுணர்கள் குழு வெளியிட்டிருக்கும் அறிக்கை இலங்கை அரசுக்குப் பெரும் அதிர்வுகளைக் கொடுத்திருக்கின்றது. தன்னைப் பாதுகாப்பதற்காகவும், சீனாவும் முன்வரும் என இலங்கை அறிவித்திருக்கின்றது. ஐ.நா. பாதுகாப்புச் சபையின் நிரந்தர உறுப்பு நாடுகளான சீனாவும், ரஷ்யாவும் இலங்கையுடனும் மிகவும் நெருக்கமான உறவுகளைக் கொண்டிருக்கின்றன. விடுதலைப் புலிகளுடனான இறுதிக் கட்டப்போரின் போது இந்த இரு நாடுகளும் வழங்கிய பிரமாண்டமான ராணுவ உதவிகளே இவ்விரு நாடுகளுடனும் நெருக்கமான உறவுகளை இலங்கை ஏற்படுத்திக்கொள்வதற்கு வழிவகுத்தது.

# இலங்கையை இந்தியா பிணை எடுக்குமா?

*ஐ.நா.வின் போர்க்குற்ற அறிக்கை தொடர்பில் தொடரும் இந்திய அரசின் மௌனம்...*



பவித்திரன்

இந்த இடத்தில் கருத்து வெளியிட்ட பாதுகாப்பு அமைச்சின் செயலாளர் கோதாபாய ராஜபக்ஷ ரஷ்யா, சீனா ஆகியவற்றின் பெயர்களைக் குறிப்பிட்ட அதேவேளையில், இந்தியாவின் பெயரை உச்சரிப்பதற்குத் தவறியதன் பின்னணியிலுள்ள அரசியல் செய்தி என்ன என்பதும் ஆராயப்பட வேண்டிய ஒன்றாகவே உள்ளது. இருந்த போதிலும் போர்க் குற்ற அறிக்கையின் பிரதி ஒன்றை புதுடில்லிக்கு அனுப்பிவைத்த ஜனாதிபதி மகிந்த ராஜபக்ஷ, இந்தியப் பிரதமர் மன்மோகன் சிங்குடனும் பேச்சுக்களை நடத்தியிருக்கின்றார். இந்தியாவின் ஆதரவை அவர் எதிர்பார்க்கின்றார் என்பதை இது புலப்படுத்தியிருக்கின்றது.

போர் இடம்பெற்ற காலப்பகுதியில் கூட இலங்கைக்கு எதிராக ஐ.நா. பாதுகாப்புச் சபையில் கொண்டுவரப்பட்ட தீர்மானங்களை முறியடிப்பதில் சீனாவும், ரஷ்யாவுமே தமது வீட்டோ அதிகாரத்தைப் பயன்படுத்தி இலங்கையைப் பாதுகாத்தன. இப்போதும் அந்த நிலை காணப்படுகின்றது என்பது உண்மை. இந்த நிலையில் இலங்கைக்கு எதிரான செயற்பாடு ஒன்றுக்கு ஐ.நா. செல்ல வேண்டுமானால் ஐ.நா. பாதுகாப்புச் சபைக்குப் புறம்பான ஒரு வழியைக் கண்டறிந்தாகவேண்டும். அவ்வாறான ஒரு வழியைக் கண்டறிந்தாலும் பிராந்தியத்திலுள்ள பலம்வாய்ந்த நாடாகவுள்ள இந்தியாவின் ஆதரவும், ஒத்துழைப்பும் ஐ.நா.வுக்கு அவசியமானதாக இருக்கும். இந்தப் பின்னணியில்தான் இந்த விவகாரத்தில் இந்தியாவின் நிலைப்பாடு என்ன என்ற கேள்வி முக்கியத்துவம் பெறுகின்றது.

இந்தியா தனது நிலைப்பாடு என்ன என்பதை வெளிப்படையாக தெரிவிக்க வேண்டும் என்று சர்வதேச மனித உரிமைகள் அமைப்பான ஹியூமன் ரைட்ஸ் வாட்சின் தெற்காசியப் பிராந்திய இயக்குநர் மீனாக்ஷி கங்கூலி கோரியுள்ளார். “இந்தியா தற்போது ஐ.நா.வின் பாதுகாப்புச் சபையில் உறுப்பினராக இருக்கிறது. எனவே இந்த அறிக்கை தொடர்பாக எதிர்காலத்தில் என்ன நடவடிக்கைகள் முன்னெடுக்கப்பட வேண்டும் என்பது தொடர்பில் மேற்கொள்ளப்படும் முடிவில் இந்தியாவுக்கும் ஒரு பங்கு இருக்கும் என்று நாங்கள் எதிர்பாக்கிறோம்” எனவும் அவர் தெரிவித்தார்.

ஐக்கிய நாடுகளின் பாதுகாப்பு சபையில் நிரந்தர உறுப்பு நாடாக முற்படும் இந்தியா, தனது வெளியுறவுக் கொள்கைகளை அதற்கு ஏற்ற வகையில் வகுத்துக் கொள்ள வேண்டும் எனவும் மீனாக்ஷி கங்கூலி கூறுகிறார். இலங்கையில் போரினால் பாதிக்கபப்ட்டுள்ள மக்களுக்கு நியாயம் கிடைக்கவில்லை என்றால் இந்தியா அது தொடர்பில் தலையிட வேண்டும் எனவும் அவர் மேலும் வலியுறுத்துகின்றார். ஹியூமன் ரைட் வாச் அமைப்பு வெளியிட்டிருக்கும் இந்த அறிக்கை இந்தியாவின் நிலைப்பாடு எவ்வாறானதாக அமையும் என்பது தொடர்பான ஆர்வத்தை மேலும் பலமடங்கு அதிகரிப்பதாக அமைந்திருக்கின்றது.

இருந்தபோதிலும், இந்தியத் தரப்பிலிருந்து இதுவரையில் எந்தவிதமான கருத்துக்களும் வெளியிடப்படவில்லை. போர்க் குற்றங்கள் தொடர்பாக இந்தியாவின் தொடர் மௌனத்துக்குக் காரணம்தான் என்ன?

இலங்கையில் இடம்பெற்ற போர்க் குற்றங்களில் இந்தியாவின் சம்பந்தமும் இருப்பதுதான் அதன் தொடர்ச்சியான மௌனத்துக்குக் காரணம் என இந்திய கம்யூனிஸ்ட் கட்சியின் தலைவர்களில் ஒருவரான ஏ.ராஜா குற்றஞ்சாட்டியிருக்கின்றார். இறுதிக் கட்டப் போரில் இலங்கைக்காக அனைத்துவகையான உதவிகளையும் இந்தியா மறைமுகமாகவும், நேரடியாகவும் வழங்கியது. “இது இந்தியாவின் போர். இந்தியாவின் போரையே நாம் செய்தோம்” என ஜனாதிபதி மகிந்த ராஜபக்ஷ போர் முடிவுக்கு வந்த சில தினங்களில் பேட்டி

ஒன்றில் தெரிவித்திருந்தமையும் கவனிக்கத்தக்கது. இந்த நிலையில்தான் இந்தியாவின் மௌனம் தொடர்பாக தனது கருத்துக்களை ராஜா முன்வைத்திருக்கின்றார்.

இலங்கையில் பாரிய போர்க் குற்றங்கள் இடம்பெற்றிருக்கின்றது என ஐ.நா. நிபுணர்குழு வெளியிட்டிருக்கும் அறிக்கையில் தெரிவிக்கப்பட்டிருப்பது தொடர்பில் காங்கிஸ் கட்சி தலைமையிலான இந்தியாவின் ஆளும் முற்போக்கு முன்னணி தன்னுடைய கருத்துக்களை முன்வைக்க வேண்டும் எனவும் வலியுறுத்தியிருக்கும் ராஜா, "விடுதலைப் புலிகளுக்கு எதிரான போரில் இந்தியா சம்பந்தப்பட்டிருக்கின்றது என வெளியான செய்திகளை இந்தியா ஒரு போதுமே மறுக்கவில்லை" எனவும் தெரிவித்திருக்கின்றார். "தமிழர்களுக்கு எதிரான போரில் இந்தியா முக்கிய பங்கை வகித்தது. இதனால்தான் இப்போது இந்தியா மௌனம் காக்கின்றது" எனவும் அவர் குற்றஞ்சாட்டுகின்றார்.

இந்தியாவைப் பொறுத்தவரையில் இந்த விவகாரம் பெரும் தர்மசங்கடமான நிலையைக் கொடுத்திருக்கின்றது என்பதுதான் உண்மை. இலங்கையைப் பொறுத்தவரையில் அது ஒருநாளும் இலங்கைக்கு எதிராகப் போகாது. இந்தப் போர்க்குற்றங்களில் இலங்கைக்குள்ள பங்கைப்போல இந்தியாவுக்கும் உள்ளது. இந்தியா நினைத்திருந்தால் இதனைத் தடுத்துநிறுத்தியிருக்க முடியும். புலிகள் அழியட்டும் என்று தமிழர்கள் அழிவதை இந்தியா பார்த்துக்கொண்டிருந்தது. இதில் தனக்கும் பங்கிருப்பதால் இதற்கு எதிரான கருத்தைச் சொல்லக்கூடிய நிலையில் இந்தியா இருக்கவில்லை. அத்துடன், இலங்கைக்கு எதிரான நிலைப்பாட்டை எடுத்தால் மகிந்தர் தனக்கு எதிராக கொஞ்சம் அதிகமாகவே சீனா பக்கம் போய்விடுவார் என்பதும் இந்தியாவுக்குத் தெரியும். அதனால்தான் இவ்விடயத்தில் இந்தியா ஒரு போதும் மகிந்தருக்கு எதிராகப் போகாது.

அதேவேளையில் மகிந்தருக்கு ஆதரவான நிலைப்பாடு ஒன்றையும் எடுக்க முடியாது. பாரிய மனிதப் படுகொலைகள் இடம்பெற்றிருப்பதை ஐ.நா. ஆதாரபூர்வமாக வெளிப்படுத்தியுள்ள நிலையில் அதற்கு எதிராக மகிந்தரை ஆதரிப்பது தமிழர்களின் சீற்றத்தை அதிகரிக்கும். அத்துடன் சர்வதேச ரீதியாகவும் இந்தியாவின் வெளிவிவகாரக்கொள்கைக்கு அது களங்கத்தை ஏற்படுத்தும். இந்த நிலைமையில் மௌனம்தான் இந்தியாவின் தெரிவாக இருக்கும். ஆனால், மறைமுகமான காய்நகர்த்தல்களை இந்தியா முன்னெடுக்கலாம். முக்கியமாக தன்னுடைய வழிக்கு வராத மகிந்தரை வழிக்குக் கொண்டுவர இதனை இந்தியா பயன்படுத்தும்.

இந்தப் பின்னணியில் தற்போதைய ஐ.நா. நிபுணர் குழுவின் அறிக்கை வெளிவந்திருக்கும் நிலையில், இறுதிக்கட்டப்போரின் போது இடம்பெற்றிருக்கக்கூடிய பாரியளவிலான போர்க் குற்றங்கள் தொடர்பான பல்வேறு அதிர்ச்சியூட்டும் தகவல்களும் அம்பலமாகியிருக்கின்றது. உண்மையில் இந்தத் தகவல்கள் அனைத்தும் மனித உரிமை அமைப்புக்கள் பலவற்றினால் ஏற்கனவே வெளிப்படுத்தப்பட்டிருந்தன. இருந்தபோதிலும் இவை அனைத்தும் ஐ.நா. நிபுணர்குழுவால் இப்போது தொகுக்கப்பட்டு ஐ.நா. செயலாளர் நாயகத்திடம் கையளிக்கப்பட்டிருப்பதில் உள்ள முக்கியத்துவம் கவனிக்கப்பட வேண்டியதாகும்.

இதுவரை காலமும் தனிப்பட்ட தொலைக்காட்சி நிறுவனங்களினாலும், இணையத்தளங்களினாலும் வெளியிடப்பட்டுவந்த போர்க் குற்றங்கள் தொடர்பான ஆதாரங்களுக்குக் கிடைத்திருக்கும் ஒரு அங்கீகாரமாகவே ஐ.நா. நிபுணர் குழுவின் அறிக்கை அமைந்திருக்கின்றது. இதனை நிராகரிப்பதாக உடனடியாக

அறிவித்த இலங்கை அரசின் பிரதிநிதிகள், தற்போது - ஐ.நா. நிபுணர் குழு தன்னுடைய அதிகார வரம்மை மீறிச்சென்று செயற்பட்டிருக்கின்றது என்ற குற்றச்சாட்டை முன்வைத்திருக்கின்றது. இந்த அறிக்கை தொடர்பில் இலங்கை அரசின் நிலைப்பாட்டை அதிகாரபூர்வமாக வெளிப்படுத்தும் வகையில் வியாழக்கிழமை கொழும்பில் நடத்திய ஊடகவியலாளர் மாநாட்டின்போதே ஐ.நா. நிபுணர் குழு தமது அதிகார வரம்பை மீறிச் சென்றிருக்கின்றது என்ற குற்றச்சாட்டை வெளிவிவகார அமைச்சர் பேராசிரயர் ஜீ.எல்.பீரிஸ் முன்வைத்தார்.



ஐ.நா. நிபுணர் குழு சமர்ப்பித்த அறிக்கையின் ஒரு பகுதி மட்டுமே ஊடகங்களுக்குக் கசிந்துள்ள நிலையில், இந்த அறிக்கையை வெளியிட வேண்டாம் எனவும் அமைச்சர் பீரிஸ் ஐ.நா. செயலாளர் நாயகத்தைக் கேட்டுக்கொண்டிருப்பது இந்த அறிக்கை இலங்கையைப் பாதிக்கக்கூடிய மேலும் பல அம்சங்களை உள்ளடக்கியிருக்கலாம் என்ற கருத்துக்கு மேலும் வலுச் சேர்ப்பதாக அமைந்திருக்கின்றது. கொழும்பில் பீரிஸ் நடத்திய ஊடகவியலாளர் மாநாட்டில் தெரிவித்த தகவல்களில் கவனிக்கத்தக்கதாக இருந்தது என்னவென்றால், ஐ.நா. வெளியிட்ட அறிக்கையின் உள்ளடக்கம் தொடர்பாக அவர் எந்தக் கருத்தையும் தெரிவிக்கவில்லை. பதிலாக அறிக்கையின் முழுமையான உள்ளடக்கத்தை ஐ.நா. வெளியிடக்கூடாது என்பதை வலியுறுத்திய அவர், போர்க் குற்றங்கள் தொடர்பாக ஐ.நா. விசாரணையை நடத்தியிருக்கக்கூடாது எனவும் குறிப்பிட்டார்.

ஐ.நா.வின் நிபுணர் குழுவை தாம் அங்கீகரிக்கவில்லை எனவும் குறிப்பிட்ட அமைச்சர் பீரிஸ், ஆரம்பத்திலிருந்தே அதனை தாம் எதிர்த்து வந்திருப்பதையும் நினைவு கூர்ந்தார்.

இந்தப் பின்னணியில் ஐ.நா. நிபுணர் குழு வெளியிட்டுள்ள அறிக்கையில் காணப்படும் தகவல்கள் முற்றிலும் உண்மையானவை என்பதையும் ஆதாரபூர்வமானவை என்பதையும் அனைத்துலக இராஜதந்திரிகளும் உணர்கின்றார்கள். ஏற்கனவே வெளிவந்த செய்திகளின் உண்மைத் தன்மையை இது உறுதிப்படுத்தியிருக்கின்றது. இந்த நிலையில் இந்தியாவைப்

பொறுத்தவரையில் அது ஒரு இரண்டக நிலையில்தான் இருக்கின்றது. இதனை ஆதரிப்பது என்பது இந்தியாவுக்கு முடியாதது. அதன் மூலம் இரண்டு பாதகமான விளைவுகள் ஏற்படும் என இந்தியா உணர்கின்றது. ஒன்று - இலங்கை முற்றுமுழுதாக இந்தியாவுக்கு எதிராகச் சென்றுவிடும். இரண்டாவது போர்க் காலத்தில் காணப்பட்ட தன்னுடைய சம்பந்தம் சம்பந்தமானது.

அதேவேளையில், ஐ.நா.வின் அறிக்கையை எதிர்ப்பது அல்லது இவ்விடயத்தில் இலங்கையை ஆதரிப்பது என்பது தமிழக மக்கள் மத்தியில் எதிர்ப்பைக் கிளப்பிவிடுவதாக அமைந்திருக்கும். அத்துடன் சர்வதேச இராஜதந்திர மட்டத்தில் இந்தியாவின் நம்பகத் தன்மையையும் அது பாதிக்கும்.

இந்தநிலையில்தான் இந்தியா மௌனமாக இருக்கின்றது. மௌனமாக இருந்தாலும் இராஜதந்திர மட்டங்களில் இடம்பெறும் நகர்வுகளை புதுடில்லி மிகவும் உன்னிப்பாக அவதானித்துக்கொண்டுதான் இருக்கின்றது. ஹியூமன் றைட் வோச் சொல்லிவிட்டதே என்பதற்காக இந்தியா தன்னுடைய நிலைப்பாட்டை வெளிப்படுத்தப்போவதில்லை. புதிலாக தன்னுடைய நிலைப்பாட்டை பகிரங்கமாக வெளிப்படுத்த முடியாத நிலையில் புதுடில்லி உள்ளது என்ற உண்மையைத்தான் ஹியூமன் ரைட் வோச்சின் அறிக்கை அம்பலமாக்கியுள்ளது.

மகிந்தவைப் பொறுத்தவரையில் இந்தியா தனக்கு ஆதரவாக வராவிட்டாலும் பரவாயில்லை. அறிக்கைக்கு ஆதரவளிக்காவிட்டால் போதுமானது!

# K.B. INTERCOM

## PRESENTS

### LAUSANNE MONTREUX மாநகரில்

தென் இந்திய நட்சத்திரங்களின் காமடிக் கலாட்டாவுடன்

# திரை இசை நிகழ்ச்சி





பிரபல நகைச்சுவை நடிகர் king kong உடன்

அசத்தப்போவது யாரு புகழ் வெங்கடேஷ்

தன் குழுவின் கலக்கும்

**சிரிப்பு சரவெடியுடனும்**



உங்களை இசை மழையில் மயக்கவைக்க வருகிறார்கள் பிரபல தென் இந்திய திரை இசைப்பின்னனிபாடகிகள் அனித்தா மற்றும் ரோசினி குழுவினர்



காலம்: 21.05.2011

இடம்: PALAIS ALCAZAR
ROUTE DE CHILLON
84, CH-1820
MONTREUX-TERRITET



தொடர்புகளுக்கு: Ruban: 079 94 78 389

இவர்களுடன் நடிகை மும்தாஜ் மற்றும் காதல் புகழ் சந்தியாவும்

# விண்வெளியில் விஞ்ஞானம் தேடி அறிய முனைகிறது சிதம்பர இரகசியத்தை!

சிதம்பரம் கோயிலிலே சிதம்பர இரகசிய வாசல் என ஒரு வாசல் உள்ளது. அதனை எப்போதாவது பக்தர் தரிசனத்துக்கு எனத் திறந்து விடுவர். அங்கே எதையும் கண்டதாக எவரும் விண்டிலர். அதாவது கண்டதாக எவரும் பிறருக்குச் சொன்னது கிடையாது.

சைவ சமையச் சித்தாந்தத்தில் சிற்றம்பலம் பேரம்பலம் என இரண்டு சமாச்சாரங்கள் முக்கிய இடம் பெறுகின்றன. சிற்றம்பலம் என்பது மனித மனமும் இந்த உலகமும் தொடர்பான விடையம். ஆழ்ந்த தியானத்தின் மூலம் மட்டுமே சிற்றம்பலம் என்ன என அறியக் முடியும்.

பேரம்பலம் என்பது பரந்த பேரண்ட விண் வெளியும் அதில் நடைபெறும் சிவனின் ஆடலும் ஆகும். சிவன் தனது ஆக்கல் காத்தல் அழித்தல் அருளல் மறைத்தல் என்ற பஞ்ச கிருத்தியங்கள் எனப்படும் 5 தொழில்களையும் பரந்த அண்ட வெளியில் சதா நிகழ்த்தி வருகிறார் எனச் சைவ சித்தாந்தம் நடராஜர் சிலை பற்றிய தத்துவ விளக்கம் தருகிறது.

அஞ்ஞானிகள் இவற்றை வெறும் பினாத்தல் என உதாசீனம் செய்து கண்டதே கடவுள் கொண்டதே சமையம் எனப் புது விளக்கம் கூறிவிடுவர். ஆனால் எதையும் ஏன்? என்ன? எப்படி? எனத் துருவித் துளைத்துப் பதில் தேடும் விஞ்ஞானிகள் கதை முற்றிலும் வேறுபட்டது.

அண்ட வெளியான பேரம்பலத்தில் என்ன நடக்கிறது? அவை எப்படி? ஏன்? ஏதனால் அல்லது யாரால் நடக்கிறது.

அவை கடவுளின் செயலா? என நவீன தொழில் நுட்பக் கருவிகள் ஏவு கணைகள் கொண்டு ஆய்வுகள் நடக்தி அறிந்து வருகிறது.

பூத வியல் அல்லது பௌதிக வியலில் புகழ் பெற்ற யெர்மன் விஞ்ஞானி ஐன்ஸ்ரையினை அறியாத சிறு பிள்ளை கூட இருக்க முடியாது. இரண்டாம் உலகப் போரை முடிக்க யப்பான் மீது போடப்பட்ட அணுகுண்டுகளுக்கும் இன்று சுனாமியால் அங்குள்ள அணு உலைகள் வெடித்துப் பெருத்த அழிவை ஏற்படுத்தவும் மூல காரணமாக இருப்பது அணு சக்தி பற்றிய ஐன்ஸ்ரைனின் அறிவியல் கணிப்பு விதிகளே.

அவருடைய அறிவியல் கணித விதிகளை விஞ்ஞானம் செயல் முறை ஆய்வுகளால் உண்மை என நிரூபித்து வருகிறது. அப்படி அதன் இன்னொரு ஆய்வாக எடுத்துள்ள விடையம்தான் பிரபஞ்சம் எனப்படும் இந்தப் பேரண்டத்தின் தோற்றமும் இயக்கமும் பற்றியது. பிரபஞ்சம் அண்டவெளியில் பல மில்லியன் ஒளி வருடங்களுக்கு முன்னால் பெரு வெடி ஓசையுடன் தோற்றம் பெற்றது என்ற விதி சரிதானா என சுவிஸ் பிரான்ஸ் எல்லைப் பகுதியில் நீண்ட சுரங்கம் அமைத்து அதனுள் செயற்கை முறையில் புரொட்டோன் நியூட்ரோன் மோதலை நிகழ்த்தி உறுதிப் படுத்திக் கொண்டனர்.

இந்நிலையில் ஐன்ஸ்ரையினின் இன்னொரு விதியான குவாண்டம் விதியை ஆய்வு செய்ய பிரபஞ்ச வெளியை ஆழ ஆய்வு செய்து அறிய விஞ்ஞான உண்மை தயாராகி வருகிறது.

குவாண்டம் விதி என்பது இப் பிரபஞ்சத்தின் அனைத்துமே ஒரு குறிப்பிட்ட அளவில் நிலையாக இயங்கி வருகிறது. எதுவும் தனது கொள் அளவை மீறாது ஒரு கட்டுப்பாட்டுக்குள் இயங்குகிறது.

இப்படி எல்லாமே ஒரு கட்டுப்பாட்டு விதிக்கமைய இயங்கும் பொழுது கடவுளுக்கு அங்கே என்ன வேலை என விஞ்ஞானிகள் கேட்கத் தொடங்கி விட்டார்கள். அப்படி கடவுள் படைப்பவராக இருந்தால் எதற்காகப் பாரிய நட்சத்திரங்களையும் தன்னுள் இழுத்து விழுங்கும் ப்ளாக் ஹோல்ஸ் என அழைக்கப்படும் இராட்சத கறுப்புத் துவாரங்களை அவர் படைக்க வேண்டும்?

இப்போது பிரபஞ்சத் தோற்றம் அழிவு பற்றி சைவ சித்தாந்தம் கூறும் விளக்கம் என்ன என்பதை அறிவது நலமாய் இருக்கும். சிவமானது ஒடுக்க நிலை விரிவு நிலை இரு நிலைகளால் இந்தப் பிரபஞ்சமும் அதனிடம் உள்ள அனைத்துமாக விளங்குகிறது. ஏனவே சிவம் என்பது பிரணவமாக தன்னுள் எதனை அடக்கிக் கொள்கிறதோ அதுவே விஞ்ஞானிகள் அழைக்கும் குவாண்டம் எனலாம். ஏனென்றால் பிரபஞ்சமும் அதன் விரிவும் ஒடுக்கமுமாக இந்தப் பிரணவமே உள்ளது.

இதுவே நடராசர் சிலை வடிவின் விளக்கமாகும். ஓடுக்க நிலையை சூனிய நிலை என்கிறது சைவ சித்தாந்தம். அப்போது அனைத்தும் அழிக்கப்பட்டு பிரணவ நிலையில் ஒன்றாக இருக்கும். பின்னர் பிரணவமான நிலையில் ஒன்றாக இருந்த சிவம் நாதம் விந்து என இரண்டாக சிவம் சக்தி என வெளிப்படுகிறது. இதனை விந்து வட்ட வடிவம் எனவும் அதிலிருந்து வெளிவரும் சக்தியானது நீள் வடிவம் எனவும் சைவ சித்தாந்தம் கூறுகிறது.

வட்டமும் நேர்க் கோடும் சிவசக்தி எனக் குறிக்க உருவானதே நாம் பிள்ளையார் சுழி என எதனையும் எழுதத் தொடங்கமுன் இடும் “உ” வடிவக் குறி. இக்குறி செங்குத்து வடிவமாக வடிவமைக்கும் பொழுது சிவலிங்க வடிவம் பெறுகிறது. சிவலிங்கத்தின் ஆவுடையார் எனப்படும் வட்ட பீடம் விந்துவின் தோற்றமும் மேலே உள்ள இலிங்கம் நாதத்தின் தோற்றமாகவும் வடிவமைக்கப்படுகிறது.

இந்த சைவ சித்தாந்த விளக்கத்தை முறையாக அறிந்து கொள்ளாமல் பிற நாட்டவரும் பிற மதத்தவரும் சிவலிங்க வழிபாடு ஆண் பெண் குறிகளின் இணைவுத் தோற்றம் அதாவது பாலியல் வழிபாடு என இழிவு படுத்தித் தமது மதங்களைப் பரப்பினர். பிறமத ஊடுருவலும் பிற மொழிக் கல்வியும் பெருமை பெறவும் தமிழ் மொழிக் கவிவியும் தமிழரின் சைவமத அறிவும் அழிந்துபட அந்நியரின் ஆட்சிகள் பெரிதும் உதவின.

கடவுளே அனைத்தையும் படைத்தார் என பிற மதவாதிகள் பிரச்சாரம் செய்த போதும் சைவ சித்தாந்தம் ஆன்மாக்கள் சிவத்தின் ஒரு பகுதியே எனவும் அவை சிவனால் படைக்கப் படுவதில்லை எனவும் கூறுகிறது. இன்று விஞ்ஞானிகள் டார்வினின் பரிணாம விதியை முழுமையாக ஏற்றுள்ள நிலையில் இறைவனும் படைப்பும் பற்றி ஏனைய மதங்கள் கொண்டுள்ள அடித்தளமே ஆட்டம் கண்டு நிற்கின்றன. ஆனால் ஆதி சங்கரராலும் ஏற்றுக் கொள்ளப்பட்ட தத்துவமசி என்ற கொள்கையும் நீ அதுவாக (கடவுளாக) இருக்கிறாய் என்கிறது.

தமிழ் மொழியும் தமிழரின் மதமாகிய சைவ சித்தாந்தக் கருத்துகளும் முற்றிலுமாக மறைத்தும் திரித்தும் பரப்புரை செய்யப்பட்டது. இதனை எதிர்கொள்ளும் அளவுக்கு நாவலருக்குப் பின்னர் எவரும் நம்மிடையே தோன்றவில்லை.
எனவே மெஞ்ஞானம் மறந்து விஞ்ஞானம் பேசி தமிழினம் மகிழ அஞ்ஞானம் தமிழினத்தையும் அதன் சைவ சமையத்தையும் அழித்து வருகிறது.

# இன்றைய காலகட்டத்தில் கலாசர விழாவின் அவசியம்.



கடந்த ஞாயிறு 24.04.2011 அன்று யேர்மனில் உள்ள Ense-Höingen என்ற இடத்தில் பாசையூர் யேசுதாசன் அவர்களால் முன்னெடுக்கப்பட்டு இனிதே நடந்தேறியது. இந்தக் கலை மற்றும் கலாசாரவிழாவில் இருநூறுக்கு மேற்பட்ட பார்வையாளர்கள் கலந்து சிறப்பித்தனர். பிரான்ஸ் நாட்டிலிருந்து புகழ் பெற்ற கலைஞர்கள் வருகைதந்தது கலைநிகழ்வுகளில் பங்கேற்றது இவ் விழாவை மேலும் மெருகூட்டியது. விழாவானது மாலை 5.00மணிக்கு ஆரம்பமாகி இரவு 11.30 வரை நடைபெற்றது.





பிரதமவிருந்தினராக மேயர் Hubert Wegener, Prof. Pastor S.J.Emanuel, Priester Siva Shri Bhaskaran (Hamm Sri Kamadchi Ambal Tempel) ஆகியோர் கலந்து கொண்டனர்.

வரவேற்பு நடனத்துடன் ஆரம்பித்த இவ் விழா அறிஞர்கள் உரையுடன் நகரத் தொடங்கியது. மேலும் பேராசிரியர் இமானுவல் அவர்களின் உரையில் இன்றைய காலகட்டத்தில் விழாவின் அவசியம் பற்றியும் தமிழர்களின் விழிப்புணர்வைப் பற்றியும் ஆழமாக எடுத்துரைத்தார். அதுபோலவே "தமிழ் அரங்கு" பொறுப்பாளர் திரு. எம். அரியநாயகத்தின் உரையும் அமைந்துள்ளமை குறிப்பிடத்தக்கது.

மேலும் இவ் விழாவில் தமிழும் தமிழர் வாழ்வும் தமிழிசை நடனம், அஞ்சா நெஞ்சம் (நாட்டுக்கூத்து) தீர்க்கசுமங்கலி (அண்ணாவயாரின் மரபு இசைநடனம், இசை நிகழ்சி ஆகிய நிகழ்வுகள் இடம்பெற்றன. நிகழ்ச்சிக்கிடையே சில தடங்கல் ஏற்பட்டாலும் நிகழ்சித்தொகுப்பாளர் அழகுபட நகர்திச்சென்றார். கலைஞர் டேவிட் இராசேந்திரனுக்கு திரு.யேசுதாசனின் வழிகாட்டலில் பேராசிரியர் இமானுவல் தலைமையில் "கலைமாமணி" விருது வழங்கப்பட்டது. இந்நிகழ்வின்போது உரையாற்றிய ஐரோப்பிய தமிழ் வானொலியின் இயக்குனர் திரு. இரவீந்திரன், இந்தியாவில் நடிகர், நடிகைகளுக்கு கொடுக்கும் விருது போல் இதை எண்ணவேண்டம் என்றும் இதை மகிமைப்படுத்திச் சிறப்புற உரையாற்றினார் அதைத் தொடர்ந்து விழாவை நடாத்திய திரு.யேசுதாசன் அவர்களைப் பாராட்டினார்.

இவ்விழா சபையோரை உற்சாகப்படுத்தியது என்று கூறுவது பொருத்தமாகும்.

தகவல்: சு. பாக்கியநாதன்



# அஜித்தின் துணிச்சல் முடிவு

வி.சபேசன்

தன்னுடைய ரசிகர் மன்றங்களை கலைப்பதாக நடிகர் அஜித் வெளியிட்டுள்ள அறிக்கை தமிழ் சினிமா உலகில் பலரின் புருவங்களை உயர்த்த வைத்துள்ளது. உண்மையில் இப்படி ஒரு முடிவை எடுப்பதற்கு மிகப் பெரிய துணிச்சல் வேண்டும்.

இந்திய சினிமாவின் தவிர்க்க முடியாத அங்கமாக, ஒரு சக்தியாக ரசிகர் மன்றங்கள் திகழ்ந்து வருகின்றன. நேற்று வந்த புதுமுக நடிகர்கள் கூட முதற்படம் முடிவதற்கு முன்பே ரசிகர் மன்றங்களை ஆரம்பித்து விடுகின்ற நிகழ்வுகள் மிகவும் சாதரணமாக நடைபெறும்.

முதற்படம் வெளிவருவதற்கு முன்பே ரசிகர் மன்றங்களை ஆரம்பிக்கின்ற நடிகர்கள் அந்தப் படம் வெளிவந்து அடுத்த படம் வருவதற்குள் தமக்கு ஒரு பட்டத்தையும் சூட்டிக் கொள்வார்கள். கேட்டால் ரசிகர்கள் தந்த பட்டம் என்று அதற்கு விளக்கமும் தருவார்கள்.

பட்டம் இல்லாத நடிகர்களை தமிழ் சினிமாவில் பார்ப்பது மிகவும் அரிது. நடிகர் அஜித்திற்கும் "அல்டிமேட் ஸ்டார்" என்று ஒரு பட்டம் இருந்தது.

கடந்த ஆண்டு "அசல்" என்கின்ற திரைப்படத்தில் நடித்துக் கொண்டிருந்த போது தன்னுடைய படங்களில் இனிமேல் பெயருக்கு முன்னால் எந்த ஒரு பட்டத்தையும் போட வேண்டாம் என்று ஒரு அறிக்கையை கொடுத்தார்.

பலருக்கு இந்த அறிக்கை ஆச்சரியத்தை கொடுத்தது. தமிழ் சினிமாவில் ஒரு முன்னணி நடிகர் பட்டத்தை துறக்க முன்வருகிறார் என்பதை அவர்களால் நம்ப முடியவில்லை. பட்டம் வேண்டாம் என்பதற்கு ஏதாவது காரணம் இருக்கும் என்று சொல்லி சிலர் குதர்க்கம் கதைக்கவும் தலைப்பட்டார்கள்.

எண் சோதிடத்தின் அடிப்படையிலேயே நடிகர் அஜித் தன்னுடைய பட்டத்தை நீக்கி விட்டார் என்பதே அவர்கள் கூறிய அந்த குதர்க்கமான காரணம் ஆகும். அந்தளவிற்கு பட்டம் என்பது தமிழ் சினிமாவில் ஒரு தவிர்க்க முடியாத விடயமாக பார்க்கப்படுகிறது. பட்டம் வேண்டாம் என்று சொன்னால் அதற்கு சோதிடம் சார்ந்த காரணம் ஏதாவது இருக்குமோ என்று ஆராய்கின்ற நிலைமைதான் அங்கே காணப்படுகிறது.

பட்டம் வேண்டாம் என்பதற்கே பதறியவர்கள் ரசிகர் மன்றமும் வேண்டாம் என்று அஜித் அறிவித்ததை பார்த்து மிரண்டு போய் நிற்கிறார்கள்.

ஏற்கனவே சொன்னது போன்று தமிழ் சினிமாவில் ரசிகர் மன்றங்கள் தவிர்க்க முடியாதவை. ஒரு நடிகரின் படம் வெளிவருகின்ற பொழுது அந்தப் படத்திற்கு கட்அவுட் வைப்பது தோரணங்கள் கட்டுவது, தாரை தப்பட்டம் முழங்க படப் பெட்டியை கொண்டு வருவது என்று ரசிகர் மன்றங்கள் அமர்க்களப்படுத்தி விடும்.

ஒவ்வொரு ரசிகர் மன்றங்கள் சார்பிலும் குறிப்பிட்ட படத்திற்கு விளம்பரத் தட்டிகள் வைத்து அந்தப் படத்தை மக்களிடம் கொண்டு போய் சேர்ப்பதில் பெரும் பங்கை ஆற்றுவார்கள். பொதுவான ரசிகர் கூட்டத்தை விட நிறுவனமயப்படுத்தப்பட்ட ரசிகர் மன்றங்களால் பல நன்மைகள் நடிகர்களுக்கு இருப்பதாகவே கருதப்படுகிறது.

"புரட்சித் தலைவர்" என்று பலராலும் அன்பாக அழைக்கப்படும் மறைந்த எம்ஜிஆர் அவர்கள் ரசிகர் மன்றங்களால் மிகப் பெரிய நன்மையை அடைந்தவர்களில் மிகவும் குறிப்பிடத்தக்கவர்.

எம்ஜிஆர் திமுகவில் இருந்து பிரிந்த பொழுது திமுகவைச் சேர்ந்தவர்கள் பெருமளவில் அவருடன் சேர்ந்து வரவில்லை. வைகோ வெளியேறிய பொழுது நிலைமை வேறு மாதிரி இருந்தது. வைகோவுடன் திமுகவின் மிக முக்கிய தலைவர்கள் வெளியேறினார்கள். பல மாவட்டச் செயலாளர்கள், தொண்டர்கள் என்று ஒரு பெரும் கூட்டமே அவருடன் சென்றது. இதை வைத்து திமுக கட்சியைக் கூட உரிமை கோருகின்ற முயற்சியில் வைகோ இறங்கியிருந்தார்.

வைகோ ஆட்சி அமைத்து முதல்வராவார், அவருடன் போனால் நாமும் பதவிக்கு வரலாம் என்று போனவர்கள், வைகோ பல தோல்விகளை சந்தித்தவுடன் விட்டு விட்டு ஓடி விட்டார்கள்.

ஆனால் எம்ஜிஆர் உடன் முக்கியமான தலைவர்களோ, தொண்டர்களோ வரவில்லை. அவர் திமுகவை விட்டு வெளியேறியதும் அவருக்கு துணையாக நின்றவர்கள் அவருடைய ரசிகர் மன்றத்தினர்தான். அவருக்காக தேர்தல் வேலை செய்து, அடி வாங்கி அவரை முதல்வர் ஆக்குவதற்கு மிகப் பெரும் பணியை ஆற்றினார்கள்.

எம்ஜிஆர் முதல்வர் ஆனதையும், அதற்கு ரசிகர் மன்றங்கள் துணை போனதையும் பார்த்த மற்றைய நடிகர்களுக்கும் அவர்களுடைய ரசிகர் மன்றங்களுக்கும் அதே ஆசை வந்து தொலைத்தது. விளைவு பல பூனைகள் புலியைப் பார்த்து சூடு போட்டுக் கொண்டு திரிகின்றன.

இன்று வரை நடிகர் ரஜினிகாந்த் கட்சி ஆரம்பிப்பார், முதல்வராவார், அப்படியே நாமும் சட்ட மன்ற உறுப்பினர்களாகவும், மந்திரிகளாகவும் ஆகி விடலாம் என்று ஆசையோடு ரஜினிகாந்தை அரசியலுக்கு வரும்படி நச்சரித்துக் கொண்டு அவருடைய ரசிகர் மன்றத்தினர் அலைகின்றார்கள். ரஜனிகாந்தும் தன்னுடைய படம் வருகின்ற நேரம் பார்த்து ஏதாவது பரபரப்பை கிளப்பி படத்திற்கு விளம்பரம் தேடி விட்டு இமயமலைக்கு பறந்து விடுவார்.

தற்பொழுது நடிகர் விஜய் அரசியல் செய்கிறேன் என்று புதிதாக கிளம்பியள்ளார். அவருடைய ரசிகர் மன்றத்தினரைப் பார்த்தால் பாடசாலை சிறுவர்கள் போல் இருக்கிறார்கள். ஓட்டுரிமை இல்லாத இவர்களை நம்பி களத்தில் இறங்கினால் உருப்பட்ட மாதிரித்தான்.

ரசிகர் மன்றங்கள் தாங்கள் கெடுவது மாத்திரம் அன்றி நடிகர்களையும் சேர்த்துக் கெடுத்துக் கொண்டிருக்கிறார்கள். நடிகர்களைக் கெடுப்பதோடு நாட்டையும் கெடுக்கிறார்கள்.

பல நடிகர்களின் ரசிகர் மன்றங்களுக்குள் கோஸ்டி மோதல்கள், பதவிப் பிரச்சனைகள் அதிகரித்து வகின்றன. உதவியாக இருப்பார்கள் என்று எதிர்பார்க்கப்பட்டவர்கள் உபத்திரவமாக மாறி நீண்ட நாட்கள் ஆகி விட்டன.

ஆனாலும் பல நடிகர்கள் தமது எதிர்காலம் கருதி ரசிகர் மன்றங்கள் பற்றி ஒரு முடிவு எடுக்கத் தயங்குகிறார்கள். ஆனானப்பட்ட ரஜினிகாந்தால் கூட "நான் என்றைக்குமே அரசியலுக்கு வர மாட்டேன், போய் வேலையைப் பாருங்கள்" என்று அறிவிக்க முடியவில்லை. அப்படிச் சொன்னால் தன்னுடைய ரசிகர் மன்றங்கள் கலகலத்துப் போய் விடும் என்று அவர் அஞ்சுகிறார். ஆதனால் அரசியல் பற்றிய கேள்விக்கு ஆண்டவனைக் கை காட்டி சமாளித்துக் கொள்கிறார்.

இப்படியான ஒரு நிலையில் ரசிகர் மன்றங்களைக் கலைப்பதாக நடிகர் அஜித் எடுத்திருக்கும் முடிவை பாராட்டியே தீர வேண்டும்.

நடிகர் அஜித் சில மாதங்களிற்கு முன்பு கலைஞர் அமர்ந்திருந்த ஒரு விழாவில் தம்மை விழாக்களுக்கு வரச் சொல்லி சிலர் மிரட்டுவதாக பகிரங்கமாகச் சொல்லி சர்ச்சைக்கு ஆளானார். கலைஞரை வைத்துக் கொண்டே துணிச்சலாக இப்படிச் சொன்னதை அடுத்து அஜித் அரசியலுக்கு வரப் போவதாக சிலர் எழுதினார்கள். அஜித் தேர்தலில் ஜெயலலிதாவை ஆதரிப்பார் என்றும் அவர்கள் சொன்னார்கள்.

இதையடுத்து அரசியல் ஆசை அஜித் ரசிகர்களையும் பற்றிக் கொண்டது. ஏற்கனவே விஜய் அரசியலுக்கு வருகிறார் என்கின்ற நிலையில் அஜித்தும் வரவேண்டும் என்று ஆசைப்பட்டவர்கள் இந்த சர்ச்சையை அடுத்து சற்று வெளிப்படையாகவே அரசியலில் இறங்கத் தலைப்பட்டார்கள்.

இவைகளை கவனித்த அஜித் ரசிகர் மன்றங்களையே கலைத்து விட்டார்.

ஏற்கனவே பல ஆண்டுகளுக்கு முன்பே நடிகர் கமல்ஹாசன் தன்னுடைய ரசிகர் மன்றங்களை நற்பணி இயக்கங்களாக மாற்றி விட்டார். அவருடைய வழியில் தன்னுடைய ரசிகர் மன்றங்களையும் நற்பணி மன்றங்களாகவே அஜித்தும் அறிவித்திருந்தார். இன்றைக்கு ஒரு படி தாண்டி அவற்றையும் கலைத்து விட்டார்.

நடிகர் அஜித் செய்துள்ள இந்த நடவடிக்கையை மற்ற நடிகர்கள் ஒரு முன்மாதிரியாக எடுத்துக் கொள்வது ஆரோக்கியமான ரசிப்புத்தன்மைக்கும் தமிழ் நாட்டின் முன்னேற்றத்திற்கும் வழிவகுக்கும்.

# அன்று தமிழீழ விடுதலைப் புலி
# இன்று சிங்களவரின்



வன்னி இறுதிக்கட்ட போரின் பொழுது தமிழீழ விடுதலைப் புலிகள் அவர்களின் போர் தளத்திற்க்கு உணவு, குடி நீர் மற்றும் வெடி குண்டுகள் உட்பட்ட பல பொருட்களை கொண்டு செல்வதற்காக விசேடமாக இரும்புத் தகட்டுக் கவசம் இடப்பட்ட வாகனம் போர்க் களத்தில் காயமடைந்த வீரர்களையேத்திச் செல்ல பயன் படுத்தப் பட்டது. இது புது மாத்தளன் பிரதேசத்தில் கைப்பெற்றப் பட்டது.







# ளின் பாவனையிலிருந்தவை
# ண்காட்சிக்கு மட்டுமே!

வன்னி இறுதிக்கட்ட போரின் பொழுது தமிழீழ விடுதலைப் புலிகளின் சிரேஸ்ட உறுப்பினர்கள் அவர்களது தாக்குதல் முயற்சிக்கும், இடத்துக்கிடம் பயனம் செய்வதற்கும், முக்கிய தருணங்களில் தாக்குதல் நடாத்துவதற்கு ஏதுவாக சக்திவாய்ந்த ஆயுதங்கள் பொருத்தப் பட்டிருந்த இந்த வாகனம் புதுக்குடியிருப்பில் நடந்த இறுதிக்கட்ட போரில் இரணுவத்தினரால் கைப்பெற்றப் பட்டது.









படங்கள்: ஜெகத் பண்டார

# மகாவம்சத்தில் மகிந்தர்!

**சிங்கள மன்னர்கள் வரிசையில் தன்னுடைய பெயரும் இடம்பெற வேண்டும் என்ற ஜனாதிபதியின் வேட்கை.**

ஆதவன்

இலங்கைத் தீவின் வரலாற்றை கூறும் மகாவம்சம் என்ற வரலாற்று நூலின் புதிய வெளியீட்டில் ஜனாதிபதி மகிந்த ராஜபக்ஷவின் வரலாற்றுக்கு மூன்று அத்தியாயங்கள் ஒதுக்கப்பட்டிருக்கின்றது. இலங்கையின் கலாசார விவகார அமைச்சு இது தொடர்பான அறிவித்தலை சில வாரங்களுக்கு முன்னர் வெளியிட்ட போது, பலருக்கும் அது ஆச்சரியத்தை ஏற்படுத்தியிருக்கலாம். இலங்கையின் குறிப்பாக சிங்கள பௌத்தர்களின் வரலாற்றைக் கூறும் முதன்மை நூலில் இடம்பிடித்துக்கொள்வதற்கு மகிந்தர் முற்பட்டிருப்பது சிங்கள மன்னர்கள் வரிசையில் தன்னுடைய பெயரும் இடம்பெற வேண்டும் என்ற அவரது வேட்கையை வெளிப்படுத்துகின்றது.

சிங்களவர்களின் வீரவரலாற்றைக் கூறும் நூலாக மகாவம்சம் சிங்கள ஆய்வாளர்களால் கூறப்படுகின்ற போதிலும், இது புனைவு, கற்பனை, ஐதீகம் மற்றும் வரலாறு என்பவற்றின் கலவைதான் என தமிழர்கள் தரப்பில் விமர்சிக்கப்படுகின்றது. மகாவம்சம் கூறும் இலங்கையின் வரலாற்றை தமிழ் ஆய்வாளர்கள் மட்டுமன்றி பக்கச்சார்பற்ற வரலாற்றாசிரியர்கள் பலரும் ஏற்றுக்கொள்ளத் தயங்குகின்றார்கள். மகாவம்சத்தின் தொடர்ச்சிதான் இலங்கையின் காணப்படும் சிங்கள இனவாதம் என்ற கருத்து ஒன்றும் உள்ளது. இந்த நிலையில் இந்த மகாவம்சத்தில் இடம்பெற்றுக்கொள்வதற்கு மகிந்த ராஜபக்ஷ மேற்கொண்டுள்ள முயற்சிகள் அவரது உண்மைச் சொரூபத்தை வெளிப்படுத்தியிருக்கின்றது.

இலங்கையின் அதிகாரத்தைக் கைப்பற்றிய சிங்களத் தலைவர்கள் அனைவரும் தம்மை சிங்கள மன்னர்களின் வாரிசுகளாகக் கருதிச் செயற்பட்டுவந்தமைதான் வரலாறு. குறிப்பாக விடுதலைப் புலிகளுடனான போரை முன்னெடுத்த அநுருத்த ரத்வத்தை, இராணுவம் யாழ்ப்பாணத்தைக் கைப்பற்றிய பின்னர் அது தொடர்பான வெற்றிப் பிரகடனத்தை

அப்போதைய ஜனாதிபதி சந்திரிகா குமாரதுங்கவிடம் பொது வைபவம் ஒன்றில் வைத்துக் கையளித்தார். அத்துடன் சிங்கள மன்னர்களில் ஒருவரான சப்புமல் குமாரனின் மறுபிறப்பாகவே சிங்கள - பௌத்த இனவாதிகளால் ரத்தவத்தை போற்றப்பட்டார். யாழ்ப்பாணத்தைக் கைப்பற்றிய பின்னர் அதனை யாப்ப பட்டுண என அவரால் மாற்றப்பட்டதும் தெரிந்ததே.

ஆனால், மகாவம்சத்தில் தன்னுடைய பெயரைப் பொறித்துக்கொள்வதற்கு அவர் அப்போது முயற்சி செய்யவில்லை. காரணம்: பாதுகாப்பு பிரதி அமைச்சர் பதவி மட்டும்தான் அவரிடம் இருந்ததே தவிர, ஜனாதிபதிப் பதவி இருக்கவில்லை. ஜனாதிபதியாக இருந்த சந்திரிகா அந்தளவுக்குச் செலவதற்கு தன்னை அனுமதிக்கப்போவதில்லை என்பதால் அவர் அந்த இடத்துடன் அடங்கிவிட்டார். ஆனால், மகிந்த ராஜபக்ஷவுக்கு நினைத்ததை நிறைவேற்றக்கூடிய ஜனாதிபதிப் பதவி கைகளில் இருப்பதால், மகாவம்சத்தில் இடம்பிடிப்பதற்கான முயற்சிகளை இப்போது மேற்கொண்டிருக்கின்றார். அவரது அந்த முயற்சிக்கு தடையாக எதுவும் வரப்போவதுமில்லை!

மகாவம்சத்தின் புதிய வெளியீட்டில் மகிந்த ராஜபக்ஷவுக்கு 3 அத்தியாயங்கள் ஒதுக்கப்படவுள்ளன. புனைவு, கற்பனை, ஐதீகம் மற்றும் வரலாறு என்பவற்றின் கலவைதான் மகாவம்வம் என வர்ணித்திருக்கும் கனடாவில் வசிக்கும் ஈழத்தின் பிரபல கவிஞரான சேரன், இலங்கை அரசாங்கத்தின் மேற்படி நடவடிக்கை தனக்கு ஆச்சரியத்தைத் தரவில்லை என்கின்றார். புனைவுகள் நிறைந்த பழைய மகாவம்சத்துக்கும் தற்போது இலங்கை அரசாங்கம் இணைக்கும் அத்தியாயங்களுக்கும் இடையில் ஒரேயொரு வித்தியாசம் மட்டுமே இருப்பதாகவும் சேரன் குறிப்பிடுகின்றார். அதாவது பழைய மகாவம்சம் சம்பவங்கள் நிகழ்ந்து பல நூற்றாண்டுகளுக்குப் பின்னர் எழுதப்பட்டிருக்கின்றது. ஆனால் இப்போது இவர்கள் போர் முடிவடைந்த உடனடியாகவே இதனை எழுதுவதற்கு முற்பட்டிருக்கின்றார்கள் எனவும் சேரன் குறிப்பிடுகின்றார்.

இலங்கை அரசாங்கத்தின் இந்தப் புதிய போக்கானது வரலாறு சார்ந்ததாக, ஆய்வுசார்ந்ததாக இருக்காது எனவும், இது அரசியல் சார்ந்ததாக, சுயநலம் சார்ந்ததாக, ஒரு நாட்டின் ஜனாதிபதியின் மிகை மதிப்பீடு சார்ந்ததாக இருப்பதாகவும் இது தொடர்பாக பி.பி.சிக்கு வழங்கிய பேட்டியின் போது சேரன் குறிப்பிட்டிருக்கின்றார். அதாவது, மகாவம்சத்தில் மகிந்தவின் பெயர் இணைக்கப்படும்போது அதில் பெருமளவுக்கு புனைவுகள், அதீத மதிப்பீடுகள் இருக்கும் என நம்பலாம். அதனைவிட தன்னுடைய அரசியல் எதிராளிகளை இருட்டடிப்புச் செய்யும் வகையில் அதனைச் செய்ய வேண்டும் என்ற மகிந்தவின் விருப்பத்தை நிறைவேற்றக்கூடிய வகையிலேயே அதிகாரிகளும் செயற்படுவார்கள்.

"கி.மு. 543 இல் விஜயன் இலங்கைக்கு வந்தது முதல் மகாசேனன் மன்னனின் ஆட்சிக்காலம் வரை மகாவம்சம் விவரிக்கின்றது. அதனுடன் இணைக்கப்பட்ட குலவம்சம் மற்றும் சூலவம்சம் ஆகியன நான்காம் நூற்றாண்டு முதல் பிரித்தானியர்கள் 1815 இல் இலங்கையைக் கைப்பற்றும் காலம் வரையிலான சரித்திரத்தை விவரிக்கின்றது" எனத் தெரிவிக்கும் இலங்கை கலாசார அமைச்சின் செயலாளர் விமல் ரூபசிங்க, இதனையடுத்து முன்னணி எழுத்தாளர்களால் அதனது 6 வது பாகத்தில் 1978 முதல் 2010 வரையிலான காலப்பகுதி குறித்து எழுதப்பட்டு வருவதாகவும், அதில் மகிந்த ராஜபக்ஷவின் காலப்பகுதியாக 3 அத்தியாயங்கள் ஒதுக்கப்பட்டிருப்பதாகவம் தெரிவித்தார்.

30 வருட காலப் போரை முடிவுக்குக் கொண்டுவந்த ராஜபக்ஷவின் ஆற்றலுக்கு இணையாக மகாவம்சத்தில் எதுவும் கிடையாது எனவும் அவர் அழுத்திக் கூறியிருக்கின்றார். ஆக, இலங்கையை ஆட்சி செய்த அரசர்களின் வரிசையில் பிரதானமான ஒருவராக மகிந்தரைக் காட்டுவதற்கான முயற்சிதான் இது என்பது தெளிவாகத் தெரிகின்றது.

"மகாவம்சம் என்பது இலங்கை வரலாற்றுத் தகவல்களை உள்ளடக்கி, அதேவேளையில் பௌத்த மதத்தை முதன்மைப்படுத்தி பௌத்த பிக்குகளால் பாளி மொழியில் எட்டுச் சுவடிகளில் செய்யுள் வடிவில் காலவரிசையாக குறித்துவைக்கப்பட்டவற்றை மூலமாகக் கொண்டு தொகுக்கப்பட்ட இலங்கையின் பழமையான தொகுப்பு நூலாகும்" என விக்கிபீடியா மகாவம்சத்தை வரையறுக்கின்றது.

இது இதற்கு முந்திய தொகுப்பு நூலான தீபவம்சம் என்ற நூலைத் தழுவி தொகுக்கப்பட்டதாக வரலாற்றாசிரியர்கள் கருதுகின்றார்கள். இந்த நூல் கி.பி. ஆறாம் நூற்றாண்டளவில், பாளி மொழியில் மகாநாம தேரர் என்னும் பௌத்த பிக்குவினால் தொகுக்கப்பட்டதாக நம்பப்படுகின்றது. அதனடிப்படையில் மகாவம்சம் நூலின் உரிமையாளர் மகாநாம தேரராகும். இதனை இலங்கையின் வரலாற்று ஆவணமாக சிங்கள பௌத்த பெரும்பான்மை பெரும்பான்மையின மக்கள் கூறிவந்தாலும், முழுமையான வரலாற்று ஆவணமாக இதனை ஏற்றுக்கொள்ள முடியாது என்ற கருத்தைத்தான் பெரும்பாலான வரலாற்றாசிரியர்கள் கொண்டுள்ளார்கள்.

அதேவேளையில், இலங்கையின் வரலாற்றுக் குறிப்புக்கள் அதாவது - சிங்கள மக்களுடைய வருகை தொடர்பான வரலாற்றுக் குறிப்புக்கள் இந்நூலில் இடம்பெற்றிருப்பதால், மகாவம்சம் நூலைத் தவித்துவிட்டு இலங்கையின் வரலாற்றை ஆய்வு செய்ய முடியாது என்னும் கருத்தும் வரலாற்றாசிரியர்களிடம் உள்ளது என்பதும் கவனிக்கப்பட வேண்டியதாகும்.

இந்த நூல் மகத நாட்டில் உருவெல எனும் இடத்தில் அரச மரத்தடியில் புத்தர் அமர்ந்திருந்த போது "பௌத்தம் வளர்ச்சியடையக் கூடிய இடம் இலங்கை என்றும், இலங்கையின் பூர்வக் குடிமக்களான இயக்கர்களை அங்கிருந்து அகற்றி, இலங்கையில் பௌத்த மதத்தை தோற்றுவித்து புனிதப்படுத்த வேண்டும் என்றும் எண்ணம் புத்தருக்கு புலனாகுகிறது" எனும் பௌத்த கற்பனைக் கருத்துருவாக்கத்தில் இருந்து தொடங்குகிறது. இப்படியான கற்பனை கருத்துருவாக்கங்கள் மகாவம்சத்தில் நிறையவே உள்ளன.

இவ்வாறான கருத்துருவாக்கங்களே இலங்கை தீவு சிங்கள பௌத்தர்களுக்கு மட்டுமே சொந்தமானது எனும் எண்ணக்கரு சிங்கள மக்களின் மனங்களில் ஆழப்பதிந்து போயுள்ளமைக்கான காரணமாகவும், இலங்கையின் இனப்பிரச்சினைக்கான ஆணிவேராகவும் பார்க்கப்படுகின்றது. தமிழர்களை இலங்கைத் தீவிலிருந்து வெளியேற்ற வேண்டும் என்ற சிங்களக் கடும்போக்காளர்களின் எண்ணங்களுக்கான அத்திவாரமாக மகாவம்சமே இருந்துள்ளது.

அத்துடன் கி.மு 543ம் ஆண்டு இந்தியாவில் இருந்து விஜயன் எனும் ஒரு இளவரசன் வந்தான் என்பது முதல், கி.பி 361ம் ஆண்டு மகாசேனன் என்பவன் ஆட்சி செய்தான் என்பது வரை இலங்கையின் வரலாற்று குறிப்புகளையும் காலவரிசையாக மகாவம்சம் விவரிக்கின்றது.

மகாநாம தேரரால் பாளி மொழியில் தொகுக்கப்பட்ட மகாவம்சம் நூலினை மூலமாகக் கொண்டு, ஆங்கில மொழியில் 1837ம் ஆண்டு முதல் அச்சுப் பதிப்பு

வெளியிடப்பட்டது. இந்த அச்சுப்பதிப்பு இலங்கையில் ஆங்கிலேயர் ஆட்சி செய்தகாலத்தில் இருந்த, சிலோன் சமூக பணியகம் எனும் பணியகத்தில் பணிப்புரிந்த பணியாளரும் வரலாற்றாசிரியரும் ஆன ஜோர்ஜ் டேனர் என்பவர் வெளியிடப்பட்டார். அதன்பின்னர் 1912ம் ஆண்டு வில்ஹெய்ம் கெய்கர் என்பவர், மாபெல் ஹெய்னஸ் போட் என்பவரின் உதவியுடன் ஆங்கில மொழிக்கு மொழிப்பெயர்ப்பு ஒன்றை செய்தார். அதே-வேளை வில்ஹெய்ம் கெய்கர் அதற்கு முன்னதாகவே பாளி மூலத்தில் இருந்து ஜெர்மன் மொழிக்கு மொழிப்பெயப்பு செய்திருந்தார் என்பது குறிப்பிடத்தக்கது.

மகாவம்சம் நூலை வரலாற்று நூலாக ஏற்க முடியாமைக்கான காரணங்களை பல மேற்கத்தைய, சிங்கள, தமிழ் வரலாற்றாசிரியர்கள் முன்வைத்துள்ளனர். அத்துடன் மகாவம்சம் நூலை தொகுத்தவரான மகாநாம தேரர் எந்தவொரு இடத்திலும் தன்னை வரலாற்று ஒரு ஆசி-ரியராகக் குறிப்பிடவில்லை என்றும் அவர் ஒரு பௌத்தப் பிக்குவாக பௌத்த மதத்தை ஆதரிக்கும் நோக்குடனேயே தொகுத்துள்ளாகவும் கூறப்படுகின்றது.

விஜயன் எனும் ஒருவரின் வருகைத் தொடர்பான சான்றுகளோ, அப்படி ஒருவன் இலங்கையை ஆட்சி செய்தமைக்கான எவ்வித ஆதாரங்களோ எங்கும் இல்லை. அதேவேளை இலங்கையின் முதல் அரசனாக சித்தரிக்கும் அதே மகாவம்ச தொகுப்பு நூலில், விஜயனின் வருகைக்கு முன்னரே இலங்கையில் அரசமைத்து இயக்கர் நாகரினத்தவர்கள் வாழ்ந்ததான குறிப்புகள், இலங்கையின் முதல் அரசன் விஜயன் எனும் கூற்றை நம்பகமற்றதாக செய்கின்றது என வரலாற்றாசிரியர்கள் கூறுகின்றனர்[சான்று தேவை]. மகாவிகா-ரைச் சார்ந்த பௌத்தபிக்குகள் கி.மு 3ம் நூற்றாண்டிலிருந்து இலங்கையில் நிகழும் வரலாற்றுச் சம்பவங்களை தினக்குறிப்பேடு



போன்று எழுதி பராமரித்து வந்தனர்.இவ் ஏடே கி.பி 5ம் நூற்றாண்டில் “மகானாம“ எனும் பௌத்தபிக்குவால் ஒன்றுபடுத்தி தொகுத்து மகாவம்சம் எனும் நூலாக வெளிப்பெற்றது.இவர் இலங்கை அரசன் தாதுசேனனின் சகோதரராவார். இவருடைய காலத்துக்கு ஐந்து நூற்றாண்டுகள் முந்திய வரலாற்று நூலான தீபவம்சத்தை சார்ந்தே நூலை தொகுத்துள்ளார்.இந் நூல் முழுமை-மயாக பௌத்தமத கண்ணோட்டத்திலே இலங்கையின் வரலாற்றை கூறிச்செல்கின்றது.

மகாவம்சத்தின் தொடர்ச்சியாக பல பௌத்தபிக்குகளால் எழுதப்பட்ட சூள வம்சம் எனும் நூல் கி.பி 4ம் நூற்றாண்டு முதல் பிரித்தானியர் முழு இலங்கையை கைப்பற்றிய ஆண்டான 1815 வரை நிகழ்ந்த வரலாற்றுச் சம்பவங்களை விபரிக்கின்றது.

இந்தப் பின்னணியில்தான் கடந்த 30 வருட காலமாக இடம்பெற்ற போரையும், அந்தப் போரை முடிவுக்குக் கொண்டுவந்த மகிந்த ராஜபக்ஷவின் வீரவரலாற்றையும் இறுதி 3 அத்தியாயங்களில் தொகுப்பதற்கான முயற்சிகளை அவரது ஆதரவாளர்களாக உள்ள அதிகாரிகள் இப்போது மேற்கொண்டுள்ளாகள். இதனைத் தான் செய்யவில்லை என்றால் தனக்குப் பின்னர் வரபவர்கள் இதனைச் செய்யப்போவதில்லை என்பது மகிந்தருக்கு நன்கு தெரியும். அதனால்தான் இந்த அவசர நடவடிக்கை!

# உருக்கிய நெய்யும் பெருக்கிய மோரும்...

உருக்கிய நெய்யும் பெருக்கிய மோரும் உடலுக்கு நல்லது என்பார்கள் பெரியவர்கள்.

நெய்யை விழுதாய் அப்படியே சாப்பிடுதல் கூடாது. உருக்கியதே உகந்தது.
அதேபோல் தயிரைவிட நீர்விட்டுப் பெருக்கிய மோர், உடலுக்கு மிகவும் நல்லது.

நெய், வெண்ணையை உருக்கினால் கிடைப்பது. மாட்டின் கொழுப்பு இது என்றும் உணவில் சேர்த்துக்கொண்டால் உடலில் கொழுப்பு அதிகமாகும் என்பது சமீப காலமாய்ப் பலரின் கருத்து. ஆனால் ஆயுர்வேத வைத்தியம் சொல்வது, நெய், உடலுக்குத் தேவையான ஒன்று என்பதாகும்.

காலம் காலமாய் நம் முன்னோர்கள் இதன் அருமை தெரிந்துதான் உணவில் சேர்த்துக்கொண்டு வந்தனர்.

இலையில் முதலில் அன்னம் பரிமாறி, உடனே உருக்கிய நெய்த்துளி சேர்த்துப் பிசைந்து முதலில் அதைத்தான் தொண்டைக் குழிக்குள் செலுத்துவார்கள். உணவுக் குழாயின் உலர்ந்த இடத்துக்கு க்ரீஸ் போல நெய் செயல்படுகிறது.

நவீன மருத்துவமும் நாகரிகமும் நெய், கொழுப்பு என்று அச்சுறுத்தி வருகின்றன. அளவான நெய், உடலுக்கு அவசியம் தேவை என்றே ஆயுள்வேத மருத்துவம் கூறுகிறது.

நெய்யினால் குரல் மிருதுத் தன்மை அடைகிறது. கண்ணில் ஒளி பெருகுகிறது. ஞாபக சக்தி அதிகமாகிறது. அறிவு வளர்கிறது. மகப்பேறு முடிந்ததும் பிரசவித்த வயிற்றுப் புண்ணினை நெய்தான் சரி செய்கிறது.

மார்பு வலிக்கும் இளைத்த உடலுக்கும் இதமானது. அக்கி எனும் தோல்நோய்க்கு நெய் சிறந்தது. நெருப்புக் காயம், ஆயுதம் தாக்கிய காயம் ஆகியவற்றுக்கு மருந்தாகும். வாதம் பித்தம் மற்றும் உடல் வறட்சியினைப் போக்கும் மேலும் பலவிதமான மருத்துவ குணங்கள் கொண்டது நெய் என்றால் அது மிகை இல்லை.

முதுமை வருவதைத் தடுத்து, இளமையினைப் பாதுகாக்கும் நெய், அளவோடு நம் உணவில் சேருவதை வழக்கத்தில் கொள்வோம். வளமாய் வாழ்வோம்!

ஷைலஜா

# இவ்வளவு... இன்னும் கொஞ்...

அனலை நிதி...

நான்காம் கட்ட ஈழப் போர் உக்கிரம் அடைந்திருந்த வேளையில் அதோ அமெரிக்கப் படைகள் வருகிறது. இதோ ஐக்கிய நாடுகள் (ஐநா) சபையினர் நம்மைக் காப்பாற்றிவிடுவார்கள் என்று மரணத்தின் வாசலில் நின்றுகொண்டிருந்த தமிழர்களுக்கு ஏமாற்றுச் செய்தியே கிடைத்தது. உலகமே தம்மை கைவிட்டுவிட்டது என்று கதறினார்கள் தமிழர்கள். ஐநாவின் பொதுச் செயலாளர் பான் கீ மூன் படுபயங்கர குற்றங்களைப் புரிந்த சிறிலங்கா அமைச்சர்களுடனும்இ படை அதிகாரிகளுடனும் கைகுலுக்கி ஆதரவளித்தே வந்துள்ளார். இந்நிலையில்தான், மேற்குலகத்தின் அழுத்தத்தின் பின்னர் கடந்த வருடம் ஜூன் 22 அன்று மூவர் அடங்கிய குழுவை நியமித்தார்.

மார்ச் 31, 2011-இல் தயாரிக்கப்பட்ட 214-பக்கங்களைக் கொண்ட விசாரணை அறிக்கையை ஏப்ரல் 25-ஆம் நாளன்று அதிகாரபூர்வமாக ஐநா வெளியிட்டது. இவ்வறிக்கையினூடாக சிங்கள அரச படைகள் செய்த அட்டூழியங்கள் பகிரங்கப்படுத்தப்பட்டுள்ளது. அரச படை அதிகாரிகள், மகிந்த ராஜபக்ச மற்றும் அவரது சகாக்களைக் கூண்டில் ஏற்ற இவ்வளவும் போதுமா இன்னும் கொஞ்சம் வேணுமா என்று கேட்கிறார்கள் உலகத் தமிழர்கள்.

சிறிலங்கா அரசுக்கு எதிராக ஐந்து வகை குற்றங்கள் கண்டறியப்பட்டுள்ளதாக ஐநா தெரிவித்துள்ளது, அவையாவன: (1) பாரதூரமான ஷெல் தாக்குதல்களில் பொது மக்களைக் கொன்றது (2) மருத்துவமனை மற்றும் மனித நேயப் பணிகளுக்குப் பயன்படும் இடங்களை தாக்கியது (3) மனிதாபிமான உதவிகளை செய்யவிடாமல் தடுத்தது; (4) போரால் பாதிக்கப்பட்டோர் மற்றும் போரில் தப்பிப் பிழைத்தோர் சந்திக்கும் மனித உரிமை மீறல்கள். அதாவது இடம்பெயர்ந்தோர் மற்றும் புலிகள் என்ற சந்தேகத்துக்குள்ளானோர் நிலை (5) போர் பகுதிக்கு வெளியே நடைபெற்ற மனித உரிமை மீறல்கள் - குறிப்பாக ஊடகங்கள் மீதும் அரசை விமர்சிப்போருக்கெதிராக நடைபெற்ற சம்பவங்கள்.

விடுதலைப்புலிகளுக்கு எதிராக ஆறு முக்கியமான வகைகளில் குற்றஞ்சாட்டப்பட்டுள்ளது, அவையாவன: (1) பொதுமக்களை மனித கேடயங்களாக பயன்படுத்தியது (2) விடுதலைப்புலிகளின் கட்டுப்பாட்டுப் பகுதிகளில் இருந்து தப்பிச் செல்ல முயன்ற பொதுமக்களை கொலை செய்தது; (3) பொதுமக்கள் தங்கியிருந்த இடங்களில் இராணுவ ஆயுதங்களை வைத்திருந்து பயன்படுத்தியது; (4) சிறார்களை பலவந்தமாக தமது போர்ப்படைக்குச் சேர்த்தமைஇ ஆட்களை கட்டாயமாக வேலைவாங்கியது (5) தற்கொலைத் தாக்குதல்கள் மூலம் பொதுமக்களைக் கொன்றது; (6) மோதல் பகுதியில் பெரும் ஆபத்து நிலவிய போதிலும், அங்கிருந்து பொதுமக்கள் வெளியேறுவதற்கு அனுமதி வழங்காத விடுதலைப்புலிகள், அவர்களை முன்னேறி வந்த இலங்கை இராணுவத்துக்கெதிராக மனிதக் கேடயங்களாக பயன்படுத்தியது.

உலக நாடுகளைப் பிரதிநிதிப்படுத்தும் ஐநாவின் மேற்குறிப்பிடப்பட்ட குற்றங்களுக்காக இரு தரப்பினரையும் தண்டிக்க ஐநாவுக்கு உரிமையுண்டு. விடுதலைப்புலிகளை

# ் போகுமா சம் வெளுமா?

ச. குமாரன்

கட்ட ஈழப்போரில் 7,000 வரையிலான தமிழர்கள் மட்டுமே இறந்தார்கள் என அடித்துக் கூறிவந்தார் பான் கீ மூன் என்பது இங்கு குறிப்பிடத்தக்கது. இன்னுமோர் நகைச்சுவை என்னவென்றால் வெறும் 0 மக்களே மடிந்தார்கள் என்று சிங்கள அரசு தொடர்ந்து கூறி

வேரோடு அழித்துவிட்டதாக சிறிலங்கா அரசே ஒப்புதல் வாக்குமூலம் அழித்துவிட்டது. உலக நாடுகளும் இதனை ஏற்றுக்கொண்டுவிட்டது. அழிக்கப்பட்ட இயக்கத்தின் மீது எவ்விதமான நடவடிக்கைகளையும் எடுக்க முடியாது. சிறிலங்கா மட்டுமே குறித்த குற்றங்களுக்காக தண்டனையை அனுபவிக்க வேண்டும். ஆகவே, சிறிலங்கா அரசின் போர் மற்றும் மனித குலத்திற்கே எதிரான குற்றங்களுக்காக அதன் தலைவர் மகிந்த ராஜபக்ச, இராணுவ அதிகாரிகள் மற்றும் அரச அமைச்சர்கள் குற்றவாளிக் கூண்டில் ஏற்றப்பட வேண்டியவர்கள். இவர்களுக்கான தண்டனையை ஐநா சபை பெற்றுத்தருமா என்பதுதான் அனைவர் மனங்களிலும் எழும் கேள்வி?

## பான் கீ மூனின் சிறுபிள்ளைத்தனமான பேச்சு

நிபுணர் குழுவின் அறிக்கையை வெளியிட்ட பின்னர் அது குறித்துக் கருத்துக் கூறிய பான் கீ மூன்இ வன்னிப் போரின்போது மேற்கொள்ளப்பட்ட போர்க் குற்றங்கள் மற்றும் மனிதவுரிமை மீறல்கள் தொடர்பில் தன்னால் எவ்வித விசாரணைகளுக்கும் உத்தரவிட முடியாது எனவும், சிறிலங்கா அரசாங்கம் சம்மதம் தெரிவித்தால் அல்லது ஐக்கிய நாடுகளின் பொதுச் சபை அல்லது பாதுகாப்பு சபை அனுமதித்தாலேதான், அது நடக்கும் எனவும் அவர் கூறியுள்ளார்.

விடுதலைப்புலிகளுக்கு எதிராக 2009-ஆம் ஆண்டு மே மாதம் முடிந்த நான்காம் கட்ட

வந்தது. இப்பொழுது வந்துள்ள ஐநாவின் விசாரணை அறிக்கையோ 40,000 வரையிலான மக்கள் கொலை செய்யபட்டுள்ளார்கள் என்று கூறுகிறது. ஆகவேஇ பான் கீ மூன் மற்றும் சிங்கள அரசு கூறி வந்த எண்ணிக்கை பொய் என்று உறுதிப்படுத்தப்பட்டுள்ளது.



மே 2009-க்கு முன்னர் பல்லாயிரம் தமிழர்கள் கொன்றொழிக்கப்பட்டார்கள். குறிப்பாக சிங்கள அரச படைகள் யாழ்ப்பாணத்தை மீட்க சண்டையிட்டபோது பல பொதுமக்கள் சாகடிக்கப்பட்டார்கள். இச்சம்பவங்களிற்கு முன்னரும் பல தடவைகள் இப்படியாக பல பொதுமக்கள் கொன்றொழிக்கப்பட்டார்கள் குறிப்பாக செம்மணி புதை குழி சம்பவம். செம்மணியில் புதைக்கப்பட்ட பல நூறு தமிழ் மக்களின் உடல்களை உலக மனிதவுரிமை அமைப்புக்களின் அழுத்தங்களின் பின்னர் தோண்டி எடுக்கப்பட்டது. உலக நாடுகள் இதனை நன்றாகவே அறிந்தார்கள். இன்று செம்மணி புதைகுழியை மேற்கொண்ட குற்றவாளிகள் சுதந்திரமாக வெளியில் நடமாடுகிறார்கள். சிங்கள அரசு பொய்ப் பிரச்சாரங்கள் மூலமாக உலகையே ஏமாற்றி வந்துள்ளது இதுவரை. இப்படியே இனியும் உலக நாடுகளை ஏமாற்றலாம் என்று மனப்பால் குடித்துக்கொண்டிருக்கிறது

சிங்கள அரசு. இதற்கு பான் கீ மூன் மறைமுகமாக ஆதரவளிக்கிறார் என்றுதான் கூறவேண்டும்.

மூன்று பேர் அடங்கிய குழுவை நியமித்து, அதன் அறிக்கையும் வெளிவந்த பின்னர்கூட சிறுபிள்ளைத்தனமாக பேசுவதிலிருந்து பான் கீ மூனின் எண்ணம் என்னவென்று புரிகிறது. தன்னால் எவ்விதமான நடவடிக்கையையும் எடுக்க முடியாது என்றால் எதற்காக குறித்த மூவர் அடங்கிய குழுவை மூன் நியமித்தார் என்பது வியப்பான விடயமாகவே உள்ளது. ஒருவேளைஇ இவ்வறிக்கை மூலமாக ஐநா-வின் நம்பகத்தன்மையை உலக அரங்கில் நிலைநாட்டலாமென்று நினைத்தாரோ என்னவோ அல்லது அன்று சிங்கள அரசு எப்படி செம்மணி புதைகுழி சம்பவத்தை பெரிதாக்கிவிட்டு பின்னர் மூடி மறைத்து, குற்றவாளிகள் சுதந்திரமாக வெளியில் நடமாட விடப்பட்டார்களோ, அதைப்போன்றே மூனும் ஈடுபடுகிறார் போலும். சிறிலங்காவை காப்பாற்ற மூன் பல தடைவைகள் முயற்சிகளை மேற்கொண்டே வந்துள்ளார். யுத்தம் இடம்பெற்ற வேளையில் ஐநா தலையிட்டிருந்தால் இவ்வளவு பாரிய மனிதப் பேரவலம் இடம்பெற்று இருந்திருக்காது என்று சண்டை இடம்பெற்றிருந்த வேளையில் கொழும்பில் ஐநா தலைமையகத்தின் பேச்சாளராகவிருந்த கோர்டன் வைஸ் கூறியிருந்தார் என்பது இங்கு குறிப்பிடத்தக்கது.

சுனாமி பேரவலத்தினால் பாதிக்கப்பட்டவர்களில் பெரும்பான்மையினர் வடக்கு மற்றும் கிழக்கு பகுதிகளைச் சேர்ந்தவர்கள் என்றாலும், உலக நாடுகள் இப்பகுதிகளுக்கு கிடைக்க வேண்டிய உதவிகளை பக்க சார்பற்ற முறையில் வழங்கவில்லை என்பதை பலரும் குறை கூறி வந்தார்கள். குறிப்பாக, விடுதலைப் புலிகளின் கட்டுபாட்டின்கீழ் இருந்த பாதிக்கப்பட்ட மக்களுக்கு எவ்வித உதவிகளும் சிறிலங்கா அரசினால் வழங்கப்படவில்லை. உலக நாடுகளும் இவர்களைக் கைவிட்டது. குறிப்பாக, ஐநா இப்பகுதிகளில் இருந்த மக்களைப் பற்றி கடுகளவேனும் கருசனை கொள்ளவில்லை என்றே கூற வேண்டும். இக்காலப் பகுதியில், தென் கொரியாவின் வெளிவிவகார அமைச்சராக இருந்த பான் கீ மூன், தென் கொரியாவின் சார்பில் சிறிலங்கா வந்து பாதிக்கப்பட்ட சிங்களப் பகுதிகளை சென்று பார்த்ததுடன், சிங்கள அரச தலைவர்களுடன் ஐந்து நட்சத்திர விடுதியில் களியாட்டத்தில் ஈடுபட்டார் என்பதும் இங்கு குறிப்பிடத்தக்கது.

ஆக, மூன் அவர்களின் சிறிலங்காவுக்கு ஆதரவான செயற்பாடுகள் என்பது இன்று நேற்றல்ல பலகாலங்களாக இருந்தே வந்துள்ளது. தமிழர்கள் என்ன பாவம் செய்தார்களோஇ ஈழத் தமிழர்கள் சொல்லனாத் துயரை அடைந்திருந்த வேளையில் மூன் அவர்கள் ஐநாவின் பொதுச் செயலாளராக பதவியிலிருந்தார். மூன் நேர்மையுடன் செயற்பட்டால், அநியாயம் செய்த சிங்கள அரச காடையர்களைக் கூண்டில் ஏற்றி தண்டனையைப் பெற்றுத்தரலாம். உரிய தண்டனையை மூனினால் பெற்றுத் தரமுடியுமா அல்லது குறித்த மூவர் அடங்கிய குழுவின் அறிக்கை வெறும் கண்துடைப்பு நாடகமா என்பதை காலம்தான் பதில் சொல்ல வேண்டும்.

## இன்னும் கொஞ்சம் வேண்டுமா என்கிறது "சனல் 4" தொலைக்காட்சி?

சிங்கள அரசிற்கு சிம்ம சொப்பனமாக இருந்துவரும் பிரித்தானியாவின் 'சனல் 4' ஈழத் தமிழர்களுக்கு இழைக்கப்பட்ட பல அட்டூழியங்களை ஒளிபரப்புச் செய்து உலக மக்களின் கவனத்தை சிறிலங்காவுக்கெதிராகத் திருப்பியது. ஐக்கிய நாடுகள் சபையும் இதனடிப்படையிலேயேதான் குறித்த மூவர் அடங்கிய குழுவை நியமித்தது என்று கூறினால் மிகையாகாது. இத்தொலைக்காட்சி பல ஒளிப்படங்களை தொடர்ந்து

ஒளிபரப்பியது. இவ் ஒளிப்படங்களை சிறிலங்கா அரசு பொய் எனக் கூறிப் பிரச்சாரம் செய்தது. ஐநாவும் இவ் ஒளிப்படங்களின் நம்பகத்தன்மையை விசாரணை செய்தது. பல விஞ்ஞான பூர்வமான ஆராட்சிகளின் பின்னர் ஐநாவும் இவ் ஒளிப்படங்கள் உண்மையே என்று கூறியது. இதன் மூலமாக சிறிலங்கா அரசின் பொய்ப் பிரச்சாரத்தை வெளிச்சமிட்டுக் காண்பிக்கப்பட்டது.




சிறிலங்கா அரசோ இன்றுவரை 'சனல் 4' தொலைக்காட்சி புலிகளின் ஆதரவாளர்களிடமிருந்து பணத்தை பெற்றே சிறிலங்காவுக்கெதிரான பொய்ப் பிரச்சார வேலைகளை செய்துவருவதாக கூறிவருகிறது. எத்தனை ஆயிரம் பொய்யைச் சொன்னாலும் ஒரு உண்மையை பொய்யாக்க முடியாது என்று சிறிலங்கா அரசிற்கு தெரியாமல் உள்ளது போலும். ஐநா குழுவின் அறிக்கை வெளிவந்தவுடன், 'சனல் 4' தொலைக்காட்சியும் மற்றுமொரு அணுகுண்டையே சிறிலங்கா மீது போட்டது. இதுவரை போர்க்குற்றக் காட்சிகளை 'சனல் 4' தொலைக்காட்சி படுபயங்கர காட்சிகளை ஒளிபரப்பாமல் இருந்தே வந்துள்ளது. புதிதாக வந்துள்ள அறிவித்தலின்படி, இதுவரை வெளியுலகத்துக்குத் தெரியவராத பயங்கரமான போர்க்குற்றக்காட்சிகளை ஒளிபரப்ப 'சனல் 4' தொலைக்காட்சி சேவை தீர்மானித்துள்ளது எனக் குறித்த நிர்வாகம் அதிரடியாக அறிவித்துள்ளது. மிக சமீபத்தில் கூட சிறிலங்காவிலிருந்து வெளியேறிய ஊடகவியலாளர் ஒருவரின் வழிகாட்டலில் யுத்தக் குற்றங்கள் அடங்கிய வீடியோக்களை 'சனல் 4' பெற்றுக்கொண்டுள்ளது என்பது குறிப்பிடத்தக்கது.

சிங்கள அரசு தொடர்ந்தும் பொய்களை உண்மையாக்க எத்தனை பிரயத்தனங்களைச் செய்தாலும் அது தோல்வியிலேயே முடியும். தனது பிரித்தானியத் தூதுவர் மூலமாக 'சனல் 4' தொலைக்காட்சி நிர்வாகத்தை சிறிலங்கா மிரட்டியும் பார்த்ததுஇ விலைபேசியாவது தனது பக்கம் இழுக்கலாம் என்றுகூட முயற்சி செய்தது. ஒன்றுமே பலனளிக்கவில்லை என்று மிகுந்த வேதனையில் உள்ளது சிறிலங்கா அரச தரப்பினர். தொடர்ந்தும் பொய்ப் பிரச்சாரங்களை மேற்கொண்டு உண்மைகளை மறைக்க முற்படுமானால், 'சனல் 4' தொலைக்காட்சி போன்ற பல நிறுவனங்கள் உண்மைக்காக குரல்கொடுக்க முன் வருவார்கள் என்பது மட்டும் உண்மை.

சிறிலங்காவுக்கு தலையிடியாக 'சனல் 4' மட்டும் இருக்கவில்லை. இன்னும் கொஞ்சம் வேணுமா என்ற வேட்கையுடன் ஏறத்தாள 134 பேர் சிங்கள இராணுவத்தால் கொடூரமாகக் கொல்லப்பட்டது தொடர்பான புகைப்படங்களை வெளிக்கொண்டு வந்துள்ளார்கள். குறிப்பிடப்பட்ட 134 பேரில் பலரை மிக நெருக்கமான நிலையில் வைத்து இராணுவத்தினர் கொன்றுள்ளனர். மேலும் பலரை மிகவும் சித்திரவதை செய்தும், எரிகுண்டுகளால் சுட்டும் கொன்றுள்ளனர். கொல்லப்பட்டவர்களின் உடலைக் கொஞ்சம் கூட மனித நேயமே இல்லாமல் மிருகங்களைவிட கேவலமான முறையில் தரையோடு தரையாக வைத்து இழுத்துச் செல்வது போலவும் காட்சிகள் உள்ளன. குறித்த கொலை செய்யப்பட்ட நபர்களில் பெரும்பாலானவர்கள் விடுதலைப்புலிகள் என்று தெரிகிறது என தமிழர் தரப்பினர் அடித்துக் கூறுகின்றனர். பெண் போராளிகளை மானபங்கப்படுத்தியும், சித்திரவதை செய்தும் கொன்றுள்ளது சிங்கள இராணுவம். அவர்களின் உடைகளைக் களைந்து

ஓட விட்டு பின்னர் இழுத்துச் செல்கிறார்கள் இராணுவத்தினர். இது வீடியோவாகவும் வெளியாகியுள்ளது. காண்போர் இதயங்களை நொறுங்கச் செய்யும் வகையில் இந்தப் புகைப்படங்களும், வீடியோக் காட்சியும் உள்ளன.

ஐநாவும் தனது அதிகாரபூர்வமான விசாரனையூடாக சிறிலங்கா அரசு போர் மற்றும் மனித குலத்திற்கே எதிரான குற்றங்களைச் செய்துள்ளதாக அறிவித்துள்ளது. அறிவித்த கையுடன், ஐநாவின் பொதுச் செயலாளர் தன்னால் சிறிலங்காவுக்கு எதிராக எதுவித நடவடிக்கைகளையும் எடுக்க முடியாது என்றும் அறிவித்துள்ளார். இவரைப்போன்ற மிக உன்னத பொறுப்பு வகிக்கும் பதவியிலிருப்பவர்களினால் தமிழர்களுக்கு நியாயம் கிடைக்குமா என்பது சந்தேகமே.

மூனுக்கு மென்மேலும் அழுத்தங்களைக் கொடுக்கும்முகமாகவும், சிங்கள அரசின் பொய்ப் பிரச்சாரங்களை முறியடிக்கும் விதத்திலும் வெளிவந்து கொண்டிருக்கிறது ஈழப் போரின் காட்சிகள். இவ்வளவும் போதுமா இல்லை இன்னும் வேணுமா என்கிற வகையில் ‘சனல் 4’ போன்ற ஊடகங்களினால் தொடர்ந்தும் போர்க் குற்றக் காட்சிகள் வந்தவண்ணமுள்ளன. சிங்கள அரசைக் கூண்டில் ஏற்றப் போதுமான ஆதாரங்கள் தொடர்ந்தும் வந்து கொண்டே இருக்கும் என்பது மட்டும் தெளிவு. இதன் மூலமாகவேனும் இந்தியா, சீனா, ரஷ்யா, போர்த்துக்கல் போன்ற நாடுகள் மற்றும் மூன் போன்ற தலைவர்கள் நீதியின் பக்கம் திரும்புவார்களா என்பதைப் பொறுத்திருந்துதான் பார்க்க வேண்டும்.

# ஸ்ரீ காமாக்ஷி அம்பாள் ஆலயத்தின் மாபெரும் கலாசார விழா

*கம் ஸ்ரீ காமா அம்பாள் ஆலயத்தால் கலாசார மண்டபம் அமையும் மையத்தியல் இரண்டு நாள் மாபெரும் கலாசார விழா நடைபெற்றது.*





இந்துமதத்தை ஆன்மீக நெறியுடன் களம் அமைத்து வரும் கம் ஸ்ரீ காமாட்சி அம்பாள் ஆலய ஆதீனகர்த்தா சிவஸ்ரீ ஆறுமுக பாஸ்கரக்குருக்கள் அவர்கள் தலைமையில் கடந்த சித்திரை மாதம் 16ம் 17ம் திகதிகளில் மாபெரும் கலாசார நிகழ்வை நடாத்தப்பட்டது.

ஆலயத்தினுடைய அடுத்த திருப்பணியாக கலாசாரமண்டபம் திருமணமண்டபம் நூல்நிலையம் கண்காட்சி மையம் போன்றவை அமையப் போகும் திடலில் தற்காலிக கூடாரம் அமைத்து மங்கல இசை வாத்தியத்துடன் ஆரம்பித்து குறிப்பாக இளையவர்கள் பலர் பங்கேற்க்க சங்கீத இசை நிகழ்வுகள் பரதநாட்டியம் வில்லுப் பாட்டு ஜேர்மனிய பெண்களின் பரதநாட்டியம்.சொற்பொழிவுகள் போன்ற கலை நிகழ்வுகள் நடைபெற்றிருந்தன. எம் இளையவர் களுக்கான கண்காட்சி மையமாக மூதாதையர் தாயகத்தில் பாவித்திருந்த (விளக்கு சட்டி அடுப்பு கத்தி வண்டில்) போன்றபல பொருட்களும் சிற்பம் ஓவியங்கள் என எம்மவர் கைவண்ணங்கள் பலவும் பார்வைக்கு வைக்கப்பட்டிருந்தன.




இவ்விழா தற்காலிக கூடாரத்தில் முதலாவது கலாசார நிகழ்வாக தொடங்கியிருந்தாலும் இளையவர்களையும் பெற்றோர்களையும் ஊக்குவிக்கும் வகையில் நிகழ்வுகள் அமைந்திருந்தன. இவ்விழாவை சிவஸ்ரீ பாஸ்கரக்குருக்கள் முழுமையான கலாசார நிகழ்வாக நடத்தி விழாவை சிறப்பித்திருந்தார். இளைஞர்களுக்கான ஓவியங்களையும் கலை நிகழ்வுகளையும் ஆலயகுருவால் பாராட்டி பாராட்டு பட்டயமும் சான்றிதழ்களும் வழங்கப்பட்டிருந்தன. சொற்பொழிவுகள் சங்கீத இசை.மங்கல இசை வாத்தியங் களையும் பாராட்டி ஆலயகுரு அனைவருக்கும் நன்றி கூறி கௌரவித்தார்.நிறைவாக மங்கல இசையுடன் விழா இனிதே நிறைவு பெற்றது.

தொகுப்பு: திருமதி. இந்து தெய்வேந்திரம் (சத்சங்க உறுப்பினர்)



# ஐ.நா. அறிக்கையைப் பயன்படுத்தும் புல்லுருவிகள்!

ச. வி. கிருபாகரன் பிரான்ஸ்

ஆயிரக்கணக்கான உயிர்களின் அர்ப்பணிப்பில், பட்டினிச்சாவில், பாலியல் வன்முறை, சித்திரவதை என பலவிதப்பட்ட இரத்தக் கறையின் அடிப்படையிலேயே இன்று ஐ.நாவின் மூவர் கொண்ட அறிக்கை வெளியாகியுள்ளது.

இந்த அறிக்கைக்குப் பாதிக்கப்பட்ட தமிழீழ மக்களின் பங்கு பெருமளவில் இருந்த பொழுதும், இவ் அறிக்கையில் எதைக் கூறுவது எதைச் சேர்ப்பது என்பதில் தமிழீழ மக்களுக்கு எந்தப் பங்கும் இருக்கவில்லையென்பதை நான் இங்கு எழுதித்தான் மற்றவர்கள் அறிய வேண்டும் என்ற அவசியம் இல்லை. இப்படியாக ஓர் சர்வதேச குழுவினால் ஐ.நா. செயலாளரின் அங்கீகாரத்துடன் வெளி வந்த அறிக்கையையே சிறிலங்கா தனது வழமையான போக்கில் தூக்கித் துணிவாக எறிகிறதுவானால் இதற்கு சிறிலங்கா அரசுடன் நின்று "கூலிக்கு மாரடிக்கும்" தமிழ் புல்லுருவிகளின் துணை இவ் சர்வாதிகார அரசிற்கு உள்ளது என்பதை நாம் இலகுவாக புரிந்து கொள்ளக் கூடியதாக உள்ளது. இவ்வறிக்கை சிறிலங்கா அரசை மட்டுமல்ல, பெரும்பான்மையான ஈழத் தமிழரின் ஆதரவையும், உலகத்தமிழரின் நன்மதிப்பையும் பெற்று முப்பது வருடகாலமாக தமிழீழ விடுதலைப் போராட்டத்தை முன்னின்று நடத்தி தமிழீழ விடுதலைப் புலிகளிடம் காணப்பட்ட குறைகள் குற்றங்களையும் தொகுத்து வழங்கியுள்ளது.

இதன் காரணமாக சர்வதேச சமுதாயம் இவ் அறிக்கையை ஓர் பக்கச் சார்பற்ற, உண்மையான சர்வதேச சட்டவரையறையை மீறி குற்றங்கள் அடங்கிய அறிக்கையாக பார்ப்பது மட்டுமல்ல, இவ் அறிக்கையில் கூறப்பட்டவற்றுக்கு நீதி தேடத் தொடங்கியுள்ளது.

ஆனால் நடந்து முடிந்த யுத்தத்தினால் பலவிதங்களில் பலன் அடைந்த தமிழ் புல்லுருவிகள் யுத்தம் முடிவடைந்ததும் சிறிலங்கா அரசிடம் செல்லாக்காசுகளாக மாறினார்கள். யுத்த காலத்தில் அமைச்சர் பதவி வகித்தவர் உதவி அமைச்சராகவும், கொழும்பிலிருந்து வெளிநாட்டுப் பிரதிநிதிகளுக்கு அரசுடன் இணைந்து, "தமிழருக்கு சகல உரிமையும் கிடைத்துவிட்டது, இது தேவையற்ற யுத்தம்" என விளக்கிய சந்நியாச வேடம் போட்ட அமைச்சர் யாழ்ப்பாணத்துக்கு அனுப்பப்பட்டது மட்டுமல்லாது பொதுமக்கள் முன்னிலையில் ஜனாதிபதியின் சகோதரனால் "பொத்துவாயை" எனக் கூறி ஒதுக்கப்பட்டவர்கள், இவ் ஐ.நா. அறிக்கையுடன் புத்துயிர் பெற்று குதூகலிக்கின்றனர்.

இவ் தமிழ்புல்லுருவிகளுக்கு இப்பொழுது

சாதகத்தில் வெள்ளி திசை போலும்! ஒருவர் சீனாவுக்கும், மற்றும் ரஷ்யாவுக்கும் செல்ல சந்தர்ப்பம் கிடைத்துள்ள அதே வேளை, தாம் விரும்பியவாறு அறிக்கை பற்றி ஊடகங்களுக்குக் கூற அனுமதி பெற்றுள்ளனர்.

ஒருவர் மது மங்கை போதையில் "விடுதலைப் புலிகள்தான் தமிழ்மக்களைக் கொன்றார்கள். இராணுவமல்ல." என்கிறார். மற்றவர் துப்பாக்கி முனையில் ஐ.நா.வுக்கு எதிராக கையெழுத்து வேட்டையில் இறங்கியதுடன், எதற்கு ஊர்வலம் செய்கிறேன் என தெரியாது ஊர்வலம் செய்கிறார். இப் புல்லுருவிகள் ஏற்கனவே பிரித்தானியா, இந்தியா போன்ற நாடுகளின் சட்ட வலைக்குள் சிக்கி இன்னும் தீர்க்கப்படாத குற்றங்களை எதிர்நோக்குபவர்கள். இப்படியான கூலிவாழ்க்கை தனது நிலம், மொழி, கலை கலாச்சாரத்தை மதிக்கும் எந்த தமிழருக்கும் ஒரு பொழுதும் ஏற்பட மாட்டாது. இப்படியாக வெட்கம் ரோசம் இல்லாது அதுவும் ஓர் சர்வாதிகார அரசுடன் ஐ.நா. அறிக்கைக்கு துணை போபவர்களாக இருந்தால், அவர்கள் நிச்சயம் புல்லுருவிகளே.

என்ன செய்வது பதவி போனால் ஊரில் யார் மதிக்கப்போகிறார்கள். ஆகையால் சிறிலங்கா அரசு கொடுக்கும் வாசகங்களை வாசிக்க வேண்டியது தான். முன்பு "தமிழன் என்று சொல்லடா. தலை நிமிர்ந்து நில்லுடா." என்று கூறிய வார்த்தை இந்த புல்லுருவிகள் "தமிழன் என்று சொல்லுடா தலை குனிந்து கூலியாய் சேவகம் செய்யடா" என மாற்றியுள்ளார்கள். இது இவர்கள் பணி.





# உலக மகா பயங்கரவாதி (?) ஒசாமா பின் லேடன் ஒழிந்தான்!

இப்படித்தான் இந்நிகழ்வை சொல்ல வேண்டும் என இன்றைய ஆளும் வர்க்கம் எதிர்பார்க்கிறது. ஏன் நமக்கு வீண் வம்பு நாமும் அப்படியே கூறிக் கொள்வது நல்லதுதானே. ஆனால் ஒருகாலத்தில் அமெரிக்க வெள்ளை மாளிகையின் உள்வீட்டுப் பிள்ளையாக நினைத்த போது போய் வரும் உரிமை பெற்றிருந்தான் என்பது அவனது கடந்த காலக் கதை.

பின் லேடனின் கொலையானது அமெரிக்க ஜனாதிபதி பராக் ஹுசேன் ஒபாமாவுக்கு அடுத்த தேர்தலுக்கான வெற்றி வாய்பை உறுதி செய்ய வல்ல கடவுச் சீட்டு எனலாம்.ஒபாமாவின் நடுப் பெயரான ஹுசேன் என்பது அவரது இஸ்லாமிய பின் புலத்தைக் குறிப்பது. இதனைப் பயன்படுத்தியே அவரின் பெயரை ஒசாமா என்றும் பராக் ஹுசேன் ஒசாமா எனவும் பிரச்சாரப்படுத்தி மக்களின் மனதைக் குழப்பினர்.

இருந்த போதும் தமது வலுவான பிரச்சார உத்திகளால் இதுவரை எந்த ஒரு வேட்பாளரும் செலவு செய்யாத தொகை-யைச் செலவு செய்து வெற்றி கண்டார். இளம் தலைமுறை வாக்களரின் அபரி-மித குறைந்த தொகை நிதி அன்பளிப்பால் தேர்தல் முடிந்த பின் கிலாரி தேர்தலுக்காகப் பட்ட கடனையும் தமது நிதியிலிருந்து கொடுத்து தமது அரசியல் நிலையை உறுதிப் படுத்தியவர்.

ஒபமாவுக்கு ஒசாமாவின் முடிவு இன்னும் ஒரு வாய்ப்பை ஏற்படுத்தி உள்ளது எனலாம். தேர்தலின் போது ஈராக் படை நகர்த்தலை கண்டித்தவர். தான் என்றால் ஒரு சிறு கொமாண்டோ படையோடு சதாம் ஹுசேனைப் பிடித்திருப்பேன் என்றவர். ஆப்கானிஸ்தானிலும் அதே வழியில் பின் லேடனையும் முடிப்பேன் என மேடைகளில் முழங்கியவர். இன்று அதனைச் செய்து காட்டி தனது ஏனைய தோல்விகளுக்கு உயிரில்லாமல் செய்து விட்டார.

ஆனால் இனி உலகம் எங்கே எதனை எப்போது எதிர்கொள்ள வேண்டி வருமோ என்ற உதறல் பல இடங்களிலும் எடுக்கத் தொடங்கி விட்டது. எடுத்துக் காட்டாக அவுஸ்திரேலிய பிரதமர் ஜுலியா கில்லார்ட் கூறுகையில் இன்று அல்கைதா புண்பட்டுள்ளது என்ற நிலைதான் ஆனால் அது இன்னும் முடிந்து விடவில்லல என்றார்.

எக்கனோமிஸ்ட் சஞ்சிகையில் பின் லேடன் 2004ல் பேசும் போது அராபிய மற்றும் ஆப்கான் போராளிகள் ரஷியாவைப் பொருளாதார ரீதியாக அழித்தது போன்று அல்குவைதா அமெரிக்காவுக்கு அதையே செய்யும் என்றார். அதுபோலவே அமரிக்கா (பொருளாதார) இரத்தப் போக்கில் அவதி-

யுறுகிறது எனக் கருத்துத் தெரிவித்துள்ளது. அமெரிக்காவில் அதிகரித்து வரும் வேலை இழப்பு, வேலை இல்லாத் திண்டாட்ட்ம், பணவீக்கம், சீனாவிடம் அதிகரித்து வரும் கடன் சுமை என்பன அமெரிக்க பொருளா-தர நிலைமையை வெளிப்படுத்துகின்றன. எனவே இது தமிழீழ விடுதலைப் புலிகள் விவகாரம் போன்ற ஒன்று அல்ல என்பதை உலகம் புரியும் வேளை காத்திருக்கு. இனிமேல் தான் ஆப்பு.

சவுதி அரேபியாவில் வசதியான குடும்பத்தில் பிறந்து பொறியி-யல் பட்டதாரியாக இருந்தவனை ஆப்கனிஸ்தானில் முஜாகிதீன்கள் ரஷிய ஆக்கிரமிப்புப் படையை எதிர்த்து போரா-டிய போது இஸ்லாமிய மக்கள் பற்றிய கருத்தாக்கத்தால் தன்னையும் அப்போரில் இணைத்துக் கொண்டவன். கொள்கை காரணமாகத் தனது வசதியான வாழ்வைத் துறந்து கரடு முரடான காடு மலைகளில் போராடத் துணிந்தவன்.

ரஷியாவை முறியடிக்க வேண்டும் என்பதற்காக அமெரிக்கா முஜாகிதீன்களுக்கு பணம் படைக்கல உதவிகளை அள்ளிக் கொடுத்தது. அப்போது கிடைத்த அமெரிக்க உறவுதான் இன்று அவனது உயிருக்கு உலை வைத்தது.

அமெரிக்காவின் அரபு தேசங்களுடன் உள்ள உறவு அரபு மக்களுக்கும் இஸ்லாத்துக்கும் எதிரான ஆட்சியாளர்களைத் துணை கொண்டு தனது தேச நலன்களை வளர்த்து அரபு நாடுகளின் வளங்களைச் சுரண்டுவதை பல்கலைக் கழகப் பட்டதாரியான பின் லேடனால் பொறுக்க முடியவில்லை.

ஆப்கானில் முஜாகிதீன்களுடன் கசப்படைந்த பின் லேடன் அல் குவைதா அமைப்பை உருவாக்கி அமெரிக்காவின் பொருளா-தாரச் சுரண்டல்களுக்கு எதிரான போரைத் தொடங்கினான். சதாம் அழிக்கப் படுவதற்கு முக்கிய காரணம் பெற்றோல் ஏற்றுமதிக்கான கொடுப்பனவு அமெரிக்க டொலராக ஏற்க முடியாது என அவன் எடுத்த முடிவு. பின் லேடனுக்கு அவன் போராட்டம் அமெரிக்கப் பொருளாதாரத்துக்கு எதிரானது என்பதாலும் பல இடங்களில் அமெரிக்காவுக்கு எதிரான தாக்குதலை நடத்தி உச்சக் கட்டமாக நியூ யோர்க் வர்த்தகக் பன் மாடிக் கட்டிடங்கள் இரண்டை விமானங்களைக் கடத்தி மோதித் தகர்க்க செய்தான்.

தமிழீழ விடுதலைப் புலிகள் அழிக்கப் பட்டதற்கும் இந்தியா சீனாவின் ஆக்கிரமிப்பு வெறியும் அமெரிக்க ஜப்பான் சீனா நாடுக-ளின் பொருளாதார தேவைகளுமே காரணம். இந்த நாடுகளின் தேவைகளை வழங்கிச் சிங்களம் தமிழின அழிப்பைச் செய்ய இவர்களின் ஒத்துழைப்பையும் பெற்றுக் கொண்டது. இந்த நாடுகளா நிபுணர் குழு அறிக்கை மீது தமிழ் மக்களின் அரசியல் உரிமைகளைப் பெற்றுத்தர முன்வரும்?

*இப்படிக் கேள்வி எழுவதும் மீண்டும் தமிழினம் வஞ்சிக்கப்படுவதும் சாத்தியமே.*



# இணையும் பலஸ்தீன மக்கள்–குமுறும் இஸ்ரேல்

சண் தவராஜா



உலகில் நீண்டகாலமாகத் தீர்க்கப்படாது இருந்துவரும் பிரச்சினைகளுள் ஒன்று பலஸ்தீன மக்களின் விவகாரம். இஸ்ரேல் என்ற நாட்டின் உதயத்தோடு ஆரம்பமான இந்தப் பிரச்சினை இன்று மோதலில் சம்பந்தப்பட்ட இரு தரப்பினரிடையேயான விவகாரம் என்பதற்கும் அப்பால் உலக வல்லரசுகளின் பிரச்சினையாக மாறியுள்ளது. 'இஸ்லா-மியப் பரம்பலு'க்கு எதிரான அச்சவுணர்வைக் கொண்டுள்ள அமெரிக்கா தலைமையிலான கிறிஸ்தவ மேற்குலகம், தாம் அச்சப்படும் இஸ்லாமிய விஸ்தரிப்பைத் தடுக்கக் கூடிய அல்லது ஓரளவேனும் கட்டுப்படுத்தக் கூடிய கேந்திர முக்கியத்துவம் மிக்க அமைவிடத்தில் உள்ள இஸ்ரேலை என்னவிலை தந்தேனும் பாதுகாக்க நினைக்கின்றது. அதன்விளைவாக பலஸ்தீன மக்களின் விவகாரத்தை அம்மக்களின் "நிம்மதியான சுதந்திர வாழ்வு" என்ற அடிப்படையைக் கொண்டு அணுகாது தமது பிராந்திய நலனோடு கூடிய இஸ்ரேலின் நலன் என்ற கண்ணோட்டத்துடன் அணுகுவதன் விளைவாக புரையோடிப் போயுள்ள இப்பிரச்சினை தீர்வுகாணப்பட முடியாத ஒன்றாக நீடித்து வருகின்றது.

இரண்டாம் உலகப் போரின் விளைவாக மிகப் பாரிய மனித, பொருளாதார, வள அழிவுகளைச் சந்தித்த உலகநாடுகள் மற்றொரு உலகப் போரைத் தடுத்துவிடும் நோக்கில் உருவாக்கிக் கொண்ட சர்வதேச மன்றமே ஐ.நா. சபை. இந்தச் சபையில் நிறைவேற்றப்பட்ட கண்டனத் தீர்மானங்களில் ஆகக் கூடுதலானவை தனக்கு எதிராகவே நிறைவேற்றப்பட்டவை என்ற 'பெருமை' பெற்ற நாடு இஸ்ரேல். 1948 இல் நாடு உதயமான நாள் முதலாக இன்றுவரை அந்நாட்டில் எத்தனையோ அரசுத் தலைவர்கள் மாறிமாறிப் பதவிக்கு வந்துள்ள போதிலும் அங்கே தொடர்ந்தும் மாறாமலிருப்பது அதன் சியோனிசக் கொள்கை ஒன்றே.

தான் புரிவது அராஜகம், அடாவடித்தனம், மனுக்குலத்திற்கு விரோதமான காரியம் எனத் தெரிந்து வைத்துக் கொண்டும் அதனை மாற்றிக் கொள்ள இஸ்ரேல் நினைக்காமைக்கான ஒரு சிறப்புக் காரணமும் உண்டு. அது மேற்குலகின் பெரும்பாலான நாடுகளில் வாழும் வல்லமைமிக்க செல்வந்த யூதர்கள் தாம் வாழும் நாடுகளில் உள்ள அரசுகளுக்குத் தரக்கூடிய அழுத்தமே. குறிப்பாக உலகின் வல்லமைமிக்க நாடு என வர்ணிக்கப்படும் அமெரிக்க அரசியல் சமூக பொருளாதார வலைப்பின்னலில் யூதர்கள் கொண்டுள்ள

செல்வாக்கானது இஸ்ரேலுக்கு எதிரான எந்தவொரு முனைப்பையும் கருவிலேயே அழித்துவிட வல்லது.

இத்தகைய செல்வாக்கின் அண்மைய உதாரணமே பலஸ்தீன சுயாட்சிப் பிரதேசத்தின் மேற்குக்கரையைக் கட்டுப்பாட்டில் வைத்திருக்கும் பத்தாஹ் அமைப்பிற்கும், காஸா பிரதேசத்தைக் கட்டுப்பாட்டில் வைத்திருக்கும் ஹமாஸ் அமைப்பிற்கும் இடையே எட்டப்பட்டுள்ள கருத்தொருமிப்புக்கு அமெரிக்காவில் கிளம்பியுள்ள எதிர்ப்பு. ஒப்பந்தத்தில் என்ன எழுதப்பட்டுள்ளது என்பது வெளிப்படுத்தப்பட முன்னரேயே எதிர்ப்புக் குரல்கள் ஓங்கி ஒலிக்கத் தொடங்கி விட்டன.

பலஸ்தீன அதிகாரசபையைக் கட்டுப்பாட்டில் வைத்திருக்கும் மஹ்மூத் அப்பாஸ் தலைமையிலான பத்தாஹ் அமைப்பிற்கும், மேற்குலகினால் பயங்கரவாதப் பட்டியலில் வைக்கப்பட்டுள்ள ஹமாஸ் அமைப்பிற்குமான பகைமை 4 வருடப் பழமையானது. பேச்சுக்களுடாக பலஸ்தீன சுதந்திர தேசத்தை அடைய விரும்புகின்றது பத்தாஹ். இது நம்பிக் கொண்டிருப்பது ஐ.நா. சபையையும் அமெரிக்கா தலைமையில் நடைபெற்றுக் கொண்டிருக்கும் சமாதானப் பேச்சுக்களையுமே. ஆறு தசாப்தங்களுக்கும் மேலாக அகதிவாழ்வு வாழ நிர்ப்பந்திக்கப் பட்டுள்ள பலஸ்தீன மக்களைப் பொறுத்தவரை ஆயுதபலமொன்றே இஸ்ரேலை வழிக்குக் கொண்டுவரச் சிறந்த மார்க்கம் என நினைக்கும் சிந்தனையின் உருவமே ஹமாஸ்.

இத்தகைய சிந்தனைக்குக் கிடைந்த அங்கீகாரமே 2006 யனவரியில் காஸா பிரதேசத்தில் நடைபெற்ற தேர்தலில் ஹமாஸ் பெற்ற மாபெரும் வெற்றி. மார்ச் 2006 இல் ஹமாஸ் அரசு பதவிப் பிரமாணம் செய்ததை அடுத்து காஸா பிராந்தியத்துக்கான பொருளாதார உதவிகளை அமெரிக்க தலைமையிலான மேற்குலகம் நிறுத்திக் கொண்டது. தொடர்ந்து ஹமாஸ் மற்றும் பத்தாஹ் அமைப்பு போராளிகளுக்கு இடையே நடைபெற்று வந்த தொடர்ச்சியான மோதல்களின் விளைவாக 2007 யூனில் காஸா பிராந்தியத்தில் இருந்து பத்தாஹ் அமைப்பு முழுமையாகவே வெளியேறியது.

மேற்குலகின் அனுசரணையோடு - சர்வதேச கண்டனங்களையும் மீறி - இஸ்ரேல் காஸா மீது விதித்த பொருளாதாரத் தடைகளுக்கு மிகவும் உறுதுணையாக நின்று செயற்பட்டது ஹொஸ்னி முபாரக் தலைமையிலான எகிப்திய அரசாங்கம். சொந்தச் சகோதரர்கள் பாதிக்கப் படுகின்றார்களே என்ற கழிவிரக்கம் கிஞ்சித்தும் அற்றவராக காஸாவிற்கும் எகிப்துக்கும் இடையிலான ஒரேயொரு எல்லைக் கடவையான ரபாவை மூடி தனது எஜமான விசுவாசத்தை நிரூபித்துக் கொண்டார் ஹொஸ்னி முபாரக். அதுமட்டுமன்றி முரண்பட்டு நிற்கும் பலஸ்தீன சக்திகள் இரண்டையுமே ஒருமைப்பாட்டுக்குள் கொணர்வதிலும் அக்கறை அற்றவராக அவர் விளங்கினார்.

ஆனால், தற்போது எகிப்தில் பதவி வகிக்கும் இடைக்கால அரசாங்கம் மேற்கொண்ட முயற்சியின் விளைவாக பத்தாஹ் - ஹமாஸ் அமைப்புக்களிடையேயான உடன்பாடு எட்டப்பட்டது. இது தொடர்பான ஒப்பந்தம் மே மாதம் மூன்றாம் திகதி கெய்ரோவில் கைச்சாத்திடப் பட்டது. இந்த நிகழ்வின்போது இரு அமைப்புக்களும் பகைமையை மறந்து இணைந்து செயற்படுவதாகவும், இடைக்கால நிர்வாகம் ஒன்றை அமைத்து புதிய தேர்தல்களை ஒரு வருடத்துக்கு இடையில் நடாத்துவதாகவும் அறிவிப்பு வெளியானது.

இந்நிலையில் அமெரிக்காவும், இஸ்ரேலும் இந்த இணைவைக் கண்டித்துள்ளன. “குடிமக்களை இலக்கு வைத்துத் தாக்குதல்களை நடாத்துவதால்” ஹமாஸ்

அமைப்பைப் பயங்கரவாதப் பட்டியலில் வைத்துள்ளதாகக் கூறும் அமெரிக்கா, ஹமாஸ் அமைப்பின் தாக்குதல்களில் பலியான இஸ்ரேலியர்களைவிட அதிகம் மக்களை இஸ்ரேல் கொன்று குவித்து வருகின்ற போதிலும் அதுபற்றிப் பேசுவதில்லை. எனினும் பலஸ்தீன அரசாங்கத்தில் ஹமாஸ் இடம்பெற்றால் 'பயங்கரவாதிகளும் அங்கம் வகிக்கும்'பலஸ்தீன அதிகார சபைக்கான நிதியுதவியை வழங்குவது கடினமாகும் என்பதே அமெரிக்காவின் நிலைப்பாடாக உள்ளது. மறுபுறம், இஸ்ரேல் பலஸ்தீன அதிகார சபைக்கு ஒதுக்கப்பட்டுள்ள பெருந்தொகை நிதியை வழங்கப் போவதில்லை என அறிவித்துள்ளது.

அதேவேளை, இஸ்ரேல் என்றொரு நாட்டை அங்கீகரிக்காத நிலைப்பாட்டை ஹமாஸ் கடைப்பிடித்து வருவதும் அமெரிக்க எதிர்ப்புக்கு ஒரு முக்கிய காரணமாக உள்ளது.

இந்த ஒப்பந்தத்தினை எதிர்க்கும் நிலைப்பாடானது ஒபாமா நிர்வாகத்தில்கூட அமெரிக்காவின் சிந்தனைப் போக்கு மாறவில்லை என்பதைத் தெளிவு படுத்துகின்றது.

இதேவேளை இந்த உடன்பாட்டைக் கண்டித்துள்ள இஸ்ரேலியப் பிரதமர் பென்ஞமின் நெத்தன்யாஹூ பலஸ்தீனப் பிரதமர் மஹ்மூத் அப்பாஸ் இஸ்ரேலுக்கும் அப்பாஸுக்கும் இடையில் சமாதானம் தேவையா அல்லது ஹமாஸுக்கும் அப்பாஸுக்கும் இடையில் சமாதானம் தேவையா என்பதை அவரே தீர்மானித்துக் கொள்ளட்டும் எனக் கூறியுள்ளார்.

இக்கூற்று இஸ்ரேல் இது விடயத்தில் கொண்டுள்ள சீற்றத்தைக் காட்டுகின்றது. ஆனால், இஸ்ரேலுடன் அப்பாஸின் சமாதானம் எனும் விடயம் பலஸ்தீன மக்களுக்கு பெரிதளவிலான நன்மையெதனையும் தந்துவிடவில்லை என்பதே யதார்த்தம்.

அரபுலகில் அண்மைக் காலமாக மக்கள் மேற்கொண்டுவரும் எழுச்சி நடவடிக்கைகளே பலஸ்தீனத்தின் இருபெரும் முரண்பாட்டுச் சக்திகளையும் இணக்கப்பாட்டுக்கு இட்டு வந்தது என்றால், இந்த மக்கள் எழுச்சியின் விளைவாக எகிப்தில் உருவாக்கம் பெற்ற புதிய அரசாங்கமே இந்த இணக்கப்பாட்டைச் சாத்தியமாக்கியுள்ளது எனலாம். இந்த உடன்பாட்டுக்கு உழைத்ததோடு மட்டும் நின்றுவிடாது ஹமாஸை முன்னிறுத்தி ஒட்டுமொத்த காஸா மக்களையும் அநியாயமாகத் தண்டித்து வந்த மனிதவிரோத பொருளாதார முற்றுகையில் இருந்து விலக்களிக்கும் நோக்குடன் காஸாவுடனான தனது எல்லையையும் எகிப்து திறந்து விட்டுள்ளது. இது தொடர்பிலான அறிவிப்பை வெளியிட்ட எகிப்திய வெளிவிவகார அமைச்சர் நபில் அல் அராபி 'இந்த எல்லையை மூடி வைத்திருப்பது வெட்கக்கேடான ஒரு செயல்' என்றார். அதேவேளை, அமெரிக்கா மற்றும் இஸ்ரேல் ஆகிய நாடுகளின் விருப்பத்துக்கு மாறாக ஈரானுடனான உறவுகளை வளர்ப்பதிலும் எகிப்து ஆர்வம் காட்டி வருகின்றது.

இஸ்ரேலையும் பலஸ்தீனர்களையும் பல வருடங்களாகப் பேச்சுவார்த்தை மேசையில் உட்கார்த்தி வைத்திருக்கும் அமெரிக்காவினால் ஆக்கிரமிக்கப்பட்ட பகுதிகளில் இஸ்ரேல் மேற்கொண்டுவரும் சட்டவிரோத குடியிருப்புக்களை நிறுத்த முடியவில்லை. ஆனாலும், இஸ்ரேலுக்கு எதிராக ஐ.நா. பாதுகாப்புச் சபையில் கொண்டுவரப்படும் தீர்மானங்களை தனது ரத்து அதிகாரத்தைப் பாவித்துத் தடுப்பதற்கு அமெரிக்கா பின்னிற்பதில்லை.

பலஸ்தீன விவகாரத்தில் புதிதாக எழுந்துள்ள சூழல் இந்த விடயத்தை மேற்குலகம் கையாண்டு வருவது தொடர்பில் அரபு மக்கள் மத்தியில் எழுந்துள்ள விசனத்தைத் தெளிவு படுத்தி நிற்கின்றது.





மறுபுறத்தே, பலஸ்தீன மக்களையும் அரபு மக்களையும் ஏமாற்றிய வண்ணம் இஸ்ரேலினதும் தனதும் பிராந்திய நலனைப் பாதுகாத்துக் கொள்ள முடியும் என்ற அமெரிக்காவின் எதிர்பார்ப்பில் மண்ணைத் தூவுவதாகவும் அமைந்துள்ளது.

தொடரும் செயற்பாடுகளால் விரக்தியடைந்துள்ள மஹ்மூத் அப்பாஸ் எதிர்வரும் செப்டம்பரில் கூடும் ஐ.நா. பொதுச்சபைக் கூட்டத் தொடரின்போது '1967இல் ஏற்றுக் கொள்ளப்பட்ட எல்லைகளுடன் கூடிய சுதந்திர பலஸ்தீன அரசைப் பிரகடனம் செய்யப் போவதாக அறிவித்துள்ளார். இந்த அறிவிப்பை அவர் மேற்கொள்வதில் இருந்து எப்பாடுபட்டேனும் அவரைத் தடுத்துவிட அமெரிக்காவால் முடியாது போய்விடுமாயின் அந்த சுதந்திரப் பிரகடனத்துக்கு பெருவாரியான உலகநாடுகளின் ஆதரவு கிட்டும் என்பது வெள்ளிடைமலை. இதன் பின்னான உலக ஒழுங்கு எவ்வாறு அமையப் போகின்றது என்பதை எதிர்வுகூறுதல் கடினமானது.

ஏற்கனவே, இந்த உத்தேசப் பிரகடனத்தை வரவேற்றுள்ள எகிப்து இதனை அமெரிக்காவும் ஏற்றுக் கொண்டு செயற்பட முன்வரவேண்டும் எனக் கோரிக்கை வைத்துள்ளது. 1988 ஆம் ஆண்டில் பாலஸ்தீன விடுதலை இயக்கத்தின் தலைவரான யஸீர் அரபாத் தனிநாட்டுப் பிரகடனத்தை வெளியிட்டபோது நூற்றுக்கும் மேற்பட்ட நாடுகள் அதனை அங்கீகரித்தன. உலகின் பெரும்பாலான நாடுகளில் பலஸ்தீன அரசின் தூதுவராலாயங்களும் செயற்பட்டு வருகின்றன.

எரியும் பிரச்சனையான பலஸ்தீனப் பிரச்சினைக்கு அமெரிக்கா தலைமையிலான மேற்குலகம் நியாயாமான தீர்வு ஒன்றைப் பெற்றுத் தரும் என்ற நம்பிக்கை மத்திய கிழக்குப் பிராந்தியத்தில் நாளுக்குநாள் குறைந்து வருகின்றமை தெளிவாகத் தெரிகின்றது. அதேபோன்று, பேச்சுவார்த்தை மார்க்கத்தினூடாக எட்டமுடியாத விடயங்களை பலப் பிரயோகத்தினுடாக மாத்திரமே எட்டமுடியும் என்ற நம்பிக்கை கொண்டோரின் எண்ணிக்கையும் அதிகரித்தே வருகின்றது.

மக்கள் எழுச்சி நடவடிக்கைகள் ஊடாக அமெரிக்கக் கொள்கைகளுக்கு முண்டுகொடுத்து வந்த சர்வாதிகரிகள் அரபுலகில் அடுத்தடுத்து சரிந்துவரும் நிலையில் மேற்குலகின் பிரித்தாளும் தந்திரத்துக்கு தொடர்ந்தும் பலியாகாமல் ஒற்றுமையாகச் செயற்பட வேண்டும் என்ற உத்வேகம் ஓங்கி வருகையில் அமெரிக்கா விரைந்து நடவடிக்கை எடுத்தே ஆகவேண்டிய தேவை உள்ளது. இல்லாவிடில் நாளடைவில் அமெரிக்காவைப் புறந்தள்ளிவிட்டே காரியங்கள் நடைபெறும் என்பதை ஊகிப்பது கடினமல்ல.




60வருடங்களுக்கு முன்புவரை சூரியனே அஸ்தமனம் காணாத உலகலாவிய சாம்பிராச்சிமாகத் பிரித்தானிய சாம்ராச்சியம் இருந்தது. இன்றும் அது கனடா அவுஸ்திரேலிய நியூசீலந்து எனப் பல நாடுகளின் அரசுத் தலைமையாக விளங்குகிறது. வெறும் கௌரவ நிலை என இருந்தாலும் கூட பொதுநலவாய நாடுகளின் அரசுத் தலைமையாகவும் மதிக்கப்படுவதால் அதன் மகத்துவமும் மாட்சிமையும் குறையவில்லை.

அதன் முடிக்குரிய இளவரசராக வரும் தகுதி கொண்ட இளவரசர் வில்லியம்ஸ் ஒரு சாதாரண பிரித்தானிய பெண்ணை காதல் திருமணம் செய்து இந்த நூற்றாண்டின் முதன் முதலாக இடம் பெறும் பிரித்தானிய அரச குடும்ப திருமணமாக வரலாற்றில் பதிவு செய்ய வைத்துள்ளார்.

ஆட்சி செய்வது அரசர் ஆனாலும் ஆட்டிப் படைக்கும் பாராளுமன்ற சட்டமும் அங்கிலிக்கன் கிருஸ்தவ திருச்சபையும் அதன் மேற்றிராணியாரும் என்பதுதான் உண்மை. அரசர் யாரை மணக்கலாம் என்பதை நாடாளுமன்றம் ஏற்றுக் கொள்ள வேண்டும். யாரை மணக்கக் கூடாது எனத் தடை போடுவது கிருஸ்தவ திருச்சபை.

இந்த இரு பகுதியினரின் சம்மதத்தைப் பெறுவது அரச குடும்பத்துக்குப் பெரும் அக்கப்போர் எனலாம். எனவே முன்னர் அரச குடும்பத்தில் காதல் மணம் இடம்பெறுவது கிடையாது. அரச குடும்பத்தின் சொந்த பந்தங்கள், உறவுகள் அல்லது அரச சபை சந்தி போசன வாய்ப்புக் கொண்டுள்ள பிரபுக்கள் குடும்பங்களில் அல்லது பிரான்ஸ் யேர்மனி போன்ற நாட்டு அரச குடும்பங்களிலிருந்து மணமக்கள் பெறப்படுவர். அதனால் அரச குடும்பத்துக் காதல் பெரும் பிரச்சனையாகி முடிவில் காதலுக்காக முடிதுறந்த எட்வேட் என்ற இளவரசர் வரலாற்றில் பதிவாகி உள்ளார்.

இந்தக் காதல் அரசுக்கு அடுத்த வாரிசான சாள்ஸ் இளவரசரை பாடாய்ப் படுத்திவிட்டது. திருமணத்துக்கு முன்னரே கமீலா பார்க்கர் என்ற பெண்ணுடன் மகாராணியாரின் அங்கீகாரத்துடன் இவருக்கு நட்பு இருந்தது. பெரிய இடத்து அந்தரங்க விடையங்கள் எதுவும் வெளிவராது. அதுவும் அரச குடும்பம் என்றால் கேட்க வேண்டுமா?

எப்படி இருப்பினும் ஒரு சாமானிய குடும்பத்தைச் சேர்ந்தவரான டயானா மீது சாள்ஸுக்கு காதல் வந்து கல்யாணமும் உலகறிய நடந்தது. அரச குடும்ப நடைமுறை கட்டுப்பாடுகள் மற்றும் கமீலாவின் நடத்தைகள் டயானாவை வெறுப்படைய வைத்தன.

டயனாவின் மேய்ச்சல் பரப்பு எல்லை மீறி முடிவில் பிரித்தானியாவின் மிகப் பெரும் வர்த்தக நிறுவனத்தின் வாரிசின் மடிகளில் தவழ்ந்து உலக வலம் வந்தார். அதன் பலன் அவரது மடியில் அந்த வாரிசின் வாரிசு அவர் வயிற்றில் வளர்ந்து வரும் நிலையில் பிரான்ஸில் வீதி விபத்தில் விதி அவரை வாரிச் சென்றது. வழியனுப்பி வைத்த புண்ணியம் மாமியாருக்கும் பிரித்தானிய உளவுத் துறைக்கும் உரியது என்பது பகிரங்க இரகசியம்.

இப்படியான சிக்கல் நிறைந்த குடும்பத்தில் சிக்கலோடு சிக்கலாகப் பிறந்த வில்லியம்ஸ் ஒரு பரிதாபத்துக்கு உரியவராக அனுதாபத்தோடு பார்க்கப்பட வேண்டியவர். ஏற்கனவே அரச குடும்பம் சாமானிய குடும்பம் என்ற மலை மடு போன்ற வர்க்க பேதம் உள்ளது. இதில் மணம் முடித்த மணப் பெண் அந்தஸ்து என்ற மலையை எப்படி எதிர் கொள்வர் என்பது எதிர்காலம் கொண்டிருக்கும் இரகசியம்.

விலியம் கேற் என்ற இருவரும் ஸ்கொத்லாந்து சென்.அன்றூஸ் பல்கலைக் கழகத்தில் ஒன்றாகப் படித்துக் கொண்டிருக்கும்போது காதல் வயப்பட்டார்கள். வெளியே தெரியாமலே அங்கே இருவரும் ஒரே விடுதியைப் பங்கு போட்டும் வாழ்ந்தார்கள். மாலை நேர டேட்டிங் எனப்படும் உல்லாச மாலை இரவு விருந்து உண்டு மகிழ்ந்தார்கள்.

சுவிற்சர்லாந்தில் உள்ள குலொஸரர் விடுதி என்னும் உல்லாசப் பனிச் சறுக்கல் விடுதியில் இருவரும் 2004ல் ஒன்றாக ஊடகப் படப் பிடிப்பரால் படம் பிடிக்கப்பட்டுப் படம் செய்தியுடன் பிரசுரமாகும் வரை இருவரின் கதையும் வெளியில் தெரியாமலே இருந்தது. இருவருக்கும் ஏற்கனவே மன விரிசல் ஏற்பட்டு பிரிந்து சில காலம் இருந்தும் உள்ளனர். அப்போது வில்லியம்ஸ் மதுவில் அமைதி தேடினார் என்கிறது செய்தி. அரச மாளிகையின் அனுமதியும் கிடைக்கப் பெரும் போராட்டமே நிகழ்ந்திருக்கும் எனவும் ஊகிக்கலாம்.

திருமணங்கள் சொர்க்கத்தில் நிச்சயிக்கப்படுகின்றன என்று ஆங்கிலேய பொன் மொழி உள்ளது. பல திருமணங்கள் படும் பாட்டைக் காணும் பொழுது சொர்க்கத்தில் இவ்வளவு மோசமான முடிவுகளையா எடுப்பார்கள்? என நினைக்கத் தோன்றுகிறது. என்னமோ தாரமும் குருவும் தன் விதி என்கிற தமிழ்ப் பழமொழிதான் சரி எனத் தெரிகிறது. காதோடு காதாக ஒரு இரகசியம். இப்போதெல்லாம் விஞ்ஞானிகளே ஊழ் வினை மறு பிறப்பு விஞ்ஞான ரீதியாக ஏற்கக் கூடியவை எனப் பேசத் தொடங்கி விட்டார்கள். அவை பற்றிய கட்டுரைகள் எதிர் காலத்தில் வாசகர் படிக்கலாம்.

என்ன எப்படி இருந்தாலும் தம்பதிகள் பதினாறும் பெற்றுப் பல்லாண்டு காலம் பெருவாழ்வு வாழ்க என வாயார வாழ்த்துவோமாக.

வாசகர்களே! நாம் வாழ்ந்த மண்ணின் வாசங்கள் எந்தக் காலத்திலும் எங்களால் மறக்கமுடியாதவை. இன்று அந்த மண் எப்பிடியிருக்கின்றதோ? என்ற ஏக்கம் எங்கள் எல்லோருக்கும் இருக்கலாம்! இருந்தாலும் எம் மண்ணின் சிறப்புக்களும், பெருமைகளும் மறக்கமுடியாதவை. அவைகளை மற்றவர்களும் அறிந்துகொள்ளவேண்டும் என்பதற்காக இந்த பகுதியை ஆரம்பித்திருக்கின்றோம். நீங்களும் நீங்கள் பிறந்த மண்ணின் சிறப்புக்களை எழுதுங்கள். வரவேற்கின்றோம்.- (ஆசிரியர்.)

# வேலணை

## வண்ணை தெய்வம்

உலக வரைபடத்தில் இலங்கை நாடே ஒரு குட்டித்தீவுதான்! மாங்காய் வடிவமாக திகழும் இத்தீவு நாட்டின் தலைமுடியாக அமைந்திருக்கும் யாழ்ப்பாணக் குடாநாட்டின் தென்மேற்குத் திசையிலும் சில குட்டித்தீவுகள் இருக்கின்றன! இவற்றில் லைடன்தீவு முதன்மையானது.

ஒல்லாந்தரால் லைடன் தீவு என அழைக்கப்பட்ட வேலணைதீவு, வடக்கே "சரவணை" என்னும் ஊருக்கு, கிழக்கே மண்கும்பான்உன்ற ஊருக்கும் இடைப்பட்டதாகும்.

நாற்திசையும் கடலால் சூழப்பட்டாலும் தென்திசையில் உள்ள கடல் நீரேரி அருகில் உள்ள இன்னொரு தீவான புங்குடுதீவிடம் இருந்து வேலணையை பிரித்து நிற்கின்றது.

இலங்கைக்கு கொழும்பு தலைநகரமாக இருப்பதுபோல வேலணைக்கு வங்களாவடியே தலைநகராக இருக்கின்றது. யாழ்ப்பாணத்திலிருந்து ஊர்காவற்துறை, புங்குடுதீவு ஆகிய நகரங்களுக்குச் செல்பவர்கள் இந்த வங்களாவடிச் சந்தியை சந்திக்காமல் செல்லமுடியாது.

யாழ்ப்பாணத்தின் கற்பகதரு என வா்ணிக்கப்படும் பனை மரங்கள் வேலணையில் அதிகம். அத்துடன் வயல் நிலங்களும் அதிகமாக உள்ள வேலணையில் உவா்நீரே அதிகமான பிரதேசங்களில் காணப்படுகின்றது. தாழ்வான பகுதிகளில் மட்டுமே நன்நீா் கிடைக்கின்றது.



கிறிஸ்தவ தேவாலையம்: வேலணை சாட்டி மாத தேவாலையம்.

பிரான்ஸ் நாட்டில் புகழ்பெற்ற சாட் மாதா ஆலயம் இருப்பதுபோல வேலணையில் சாட்டி மாதா என்னும் தேவாலயம் இருக்கின்றது. பிரான்ஸ் சாட்மாதா ஆலயத்தில் கூடுசுத்தல் நடைபெறும் அதே நாளிலேயே வேலணை சாட்டிமாதா ஆலயத்திலும் கூடுசுத்தல் திருவிழா நடைபெறுவது வழமையாகும்.




இதேபோல புகழ்பெற்ற பல சைவ ஆலயங்களும் இருக்கின்றன. இவற்றில் "பெருங்குளத்து ஸ்ரீ முத்துமாரியம்மன் ஆலயம்" "பெரியபுலம் மகா கணபதிப்பிள்ளையார் ஆலயம்" "இலந்தைவனம் சித்திவிநாயகர் ஆலயம்" "பள்ளம்புலம் முருகமூர்த்தி கோவில்" "செட்டிபுலம் காளாவாய்த்துறை ஐயனார் ஆலயம்" "அம்பிகைநகர் ஸ்ரீ மகேஸ்வரி ஆலயம்" இப்படி இன்னும் சில ஆலயங்களும் இருக்கின்றன.




சாட்டி தொடக்கம், அல்லைப்பிட்டிவரை பழிங்குபோன்ற வெள்ளை மணல்கள் நிரம்பி வழியும். அதனால் அதனை வெள்ளைக்கடற்கரை என்றே அழைக்கப்படுகின்றது. இந்த வெள்ளைக்கடற்கரையை ஒட்டி மிகப்பெரிய பள்ளிவாசல் ஒன்றும் இருக்கின்றது.

வேலனை பற்றிய தகவல்கள் அடுத்த இதழில் தொடரும்...

# மாமனிதர் சிவராமின் ஆறாவது நினைவு










ஈழத் தமிழ் ஊடகத்துறையில் தனக்கென தனியொரு முத்திரை பதித்து 'மாமனிதராகக்' கௌரவம் பெற்ற டி. சிவராமின் ஆறாவது நினைவு தினத்தையொட்டி சிவராம் நினைவு மன்றம் ஏற்பாடு செய்த நினைவுப் பேருரை சுவிற்சர்லாந்தின் தலைநகரான பேர்ண் மாநகரில் நடைபெற்றது. இந்நிகழ்வில் இலங்கையின் பிரபல ஊடகவியலாளரும் மனித உரிமைச் செயற்பாட்டாளருமான சுனந்த தேஷப்பிரிய 'சிவராம் மறைவின் பின் 6 வருடங்கள் - சிறி லங்காவில் ஊடக சுதந்திரமும் சட்ட அமுலாக்கமும்' என்ற தலைப்பில் உரையாற்றினார்.

ஈழத் தமிழர்களின் சுயநிர்ணய உரிமைக்கான போராட்டத்தில் தமிழ் ஊடகவியலாளர்களின் பங்கு காத்திரமானது. தமிழ் மக்கள் போராட்டத்தில் ஈடுபட்டமைக்கான தர்ம நியாயங்கள் இருட்டடிப்புச் செய்யப்பட்ட வேளைகளில் எல்லாம் அவற்றை வெளிக் கொணர்வதில் அவர்கள் அரும் பாடுபட்டார்கள். மனித உரிமைகள் மீறப்பட்ட பொழுதுகளில் அவற்றைக் காக்க முனைந்ததுடன் அவை தொடர்பிலான விழிப்புணர்வை மக்கள் மத்தியில் உருவாக்குவதிலும் அவர்கள் முன்னின்றார்கள். தமிழ்த் தேசியம் தொடர்பான கருத்துக்களை வெளிப்படையாகப் பேசுகின்ற சூழல் இல்லாத காலகட்டத்தில் அத்தகைய சூழலொன்றை உருவாக்குவதில் அவர்கள் ஏனையோருடன் தோளோடு தோள் நின்று செயற்பட்டார்கள்.

இத்தனை காரியத்தையும் அவர்கள் எதிரியின் பாசறையில் நிராயுதபாணியாக நின்றே சாதிக்க வேண்டியிருந்தது. இந்தச் செயன்முறையில் அவர்கள் இழந்தவை ஏராளம். ஆயினும், இன்றைய சூழ்நிலையிலும் நம்பிக்கை ஒன்றையே ஆயுதமாகக் கொண்டு அவர்களுள் சிலர் மானுடம் சுடரும் விடுதலைக்காய் தொடர்ந்தும் உழைத்து வருகின்றமையைக் காண முடிகின்றது.

# CAFE BHARATH

Specialitées Indienne & Srilankaise

இலங்கை,
இந்திய உணவுவகைகள்,
புரியாணி,
தோசை வகைகள்.

ஓடர் சாப்பாடு அனைத்தும் உண்டு மகிழ்ந்திட நாடுங்கள்

67, rue Louis Blanc, 75010 Paris
Tel: 01 58 20 06 20
M°: La Chapelle / Gare du Nord

# சஜூக்கா

அழகு நிலையம்



முகப் பொலிவு,
இமை முடி சீர் செய்தல்,
நக டிசைனிங்,
உடல் மசாஜ்,
ஆயுள் வேதம்,
தலைமுடிவெட்டுதல்,
முகப்பரு சிகிச்சை

திருமதி நவரூபன் சுகந்தினியின் நிர்வாகத்தில்
Heinrichstr. 122, 8005 Zürich, Switzerland
Tel: 044 558 68 86 - Mobile: 079 853 50 49

பாரிஸ் நகரில்

# SAI CASH & CARRY



193, rue du fdg. St. Denis
75010 Paris
Tel: 01 40 34 69 33

# அண்ணாச்சி

உணவகம்

209, rue du fdg. St. Denis
75010 Paris
Tel: 01 46 07 38 12



சகல வசதிகளுடன் ஓர்
தமிழ் உணவகம்

இலங்கை,
இந்திய உணவுவகைகளுக்கு
பாரிஸ் நகரில்

# Shalini Restaurant

208, rue du fdg. St. Denis
75010 Paris
Tel: 01 46 07 43 80

FRANCE, பாரிஸ் நகரில்

# FISH O FISH

மீன், இறைச்சி வகைகளுக்கு
எம்மை நாடுங்கள்.



193, rue du fdg. St. Denis
75010 Paris
Tel: 01 40 38 28 57